## உள்ளடக்கம்

## முன்னுரை

இறைவன் உறையும் திருத்தலங்கள் பற்றிய வரலாற்று நூல்கள் தமிழில் நிறைய உண்டு. பக்தி இயக்க காலகட்டத்தில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் தங்கள் பாடல்கள் மூலம் திருக்கோயிலையும் அதில் உறையும் இறைவனையும் புகழ்ந்தும் போற்றியும் பக்தியை வெளிப்படுத்தினர். திருக்கோயிலுக்கு வழங்கப்பெற்ற தானங்களைப் பற்றி கல்வெட்டுகளும் செப்பேடுகளும் விரிவாகப் பேசுகின்றன. சைவ சமயத்தில் ஒரு கூறாக விளங்கும் பைரவ வழிபாடு தமிழகமெங்கும் பரவலாக இடம் பெறும் ஒரு வழிபாட்டு மரபாகும். இந்த மரபில் தோன்றிய தகட்டூர் பைரவர் திருக்கோயில் இலிங்கத் திருமேனி இல்லாமல் பைரவர் உருவில் மூலவர் பைரவநாதராகக் கிழக்கு நோக்கிக் கோயில் கொண்டிருப்பது சிறப்பம்சமாகும். காவல் தெய்வமாக அறியப்படும் அருள்மிகு பைரவர் மற்றும் அருள்மிகு இராவுத்தர் திருக்கோயில் கொண்டுள்ள இத்தலங்கள் பற்றிய வரலாற்று நூல்கள் இதுகாறும் ஏதும் தொகுக்கப்படவில்லை. இத்திருக்கோயில்கள் பற்றிப் பரம்பரையாகச் சொல்லப்பட்டு வரும் செய்திகளோடு இதர செய்திகளையும் சேர்த்து முறையாக ஒரு வரலாற்று நூலாக இந்நூலை வெளியிடுகிறேன்.இந்நூலில் சைவம் என்ற பிரிவில் அதன் முழுமுதல் இறைவன் சிவன் பற்றியும் அதன் தத்துவ நெறிகள் மற்றும் அதில் அடங்கியுள்ள பல்வேறு பிரிவுகள் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளது. குறிப்பாக தமிழ்நாட்டில் பின்பற்றப்படும் சைவ சித்தாந்த கோட்பாட்டின் மையக் கருத்து எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அடுத்து பைரவரின் பல்வேறு வடிவங்களும் தோற்றமும் கூறப்பட்டுள்ளது.



வேதாரண்யம் மற்றும் தகட்டூர் ஆகியவற்றின் வரலாற்று, புவியியல் காரணங்கள் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது. தகட்டூர், பைரவர் திருக்கோயில் எவ்வாறு இராமாயணத் தொடர்பும், சமாதித் தெய்வ வணக்கத்துடன் கொண்டுள்ள தொடர்பும் விவாதிக்கப்பட்டுள்ளது.

தகட்டூர் தலத்தில் மற்றொரு கூறாக விளங்கும் இராவுத்தர் கோயிலின் சிறப்பும் தன்மையும் விளக்கப்பட்டுள்ளது. இத்திருக்கோயில்கள் குலத்தெய்வமாக வழிபடப்படுவதும், இக்கோயில் பற்றியச் செய்திகள் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு ஆவணங்களில் காணப்படும் குறிப்புகளும் முன்வைக்கப்பட்டுள்ளது.

தேய்பிறை அஷ்டமி, பைரவ மூகூர்த்தம் போன்றவை பற்றியக் குறிப்புகளுடன் மாப்பிள்ளை வீரன் கோயில் பற்றியும், திருக்கோயில் அமைப்பு, வழிபாடு, இத்தலத்தைச் சூழ்ந்துள்ள பைரவர் சிறப்புகள், சோழர் ஆட்சியில் பைரவர் வழிபாடு கொண்டிருந்த முக்கியத்துவம் போன்றவை பக்தி நிலையிலும், வரலாற்று நிலையிலும் விவாதிக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளது.

தகட்டூரில் அருள்பாலிக்கும் அருள்மிகு பைரவநாதர் மற்றும் அருள்மிகு இராவுத்தர் ஆகிய இத்தெய்வங்களைப் பற்றிய செய்திகள் அடங்கிய இந்நூல் இத்தெய்வங்களின் திருவருளாலும், எனது நெடுநாளைய விருப்பத்தாலும் நூல் வடிவம் பெற்றுள்ளது. இக்கோயில் பல்லாயிரக் கணக்கான மக்களால் வழிபடப் பெற்று வருவதும், இப்பகுதி மக்களின் குலத்தெய்வமாகவும் விளங்குவதாலும் ஆன்மீக அன்பர்களுக்கு இந்நூல் பயனுள்ளதாக இருக்கும் என்று நம்புகிறேன். இது ஒரு சிறிய முயற்சி. எதிர்காலத்தில் இந்நூல் அதிகமான பக்கங்களில் விரிவடையும் என்று எதிர்பார்க்கிறேன். இந்நூல் ஆக்கத்திற்கு உதவி செய்த அனைவருக்கும் நன்றி.

அன்புடன்
**இரா.உமாமகேஸ்வரி**
நூலாசிரியர்

## அணிந்துரை

அருள்மிகு தகட்டூர் பைரவநாதர் மற்றும் அருள்மிகு இராவுத்தசாமி திருக்கோயில்கள் பற்றிய வரலாற்று நூல் வெளிவருவது பற்றி மிக்க மகிழ்ச்சியடைகிறேன். சுந்தரமூர்த்தி நாயனாரால் திருநாட்டுத் தொகையில் வைத்துப் பாடல் பெற்றதும், இத்திருக்கோயிலில் நிர்மாணிக்கப்பட்ட பைரவ இயந்திரத்தின் சக்தியாலும், குலத் தெய்வ வழிபாட்டு முறையாலும், புகழ்பெற்ற இத்திருக்கோயில் வரலாறு இதுநாள் வரையிலும் முறையாகத் தொகுக்கப்பட இறைவன் திருவருள் கிட்டாததே காரணம் என்று நினைக்கிறேன். இத்திருக்கோயில் வழிபாட்டோடும், குடமுழுக்கு உள்ளிட்ட திருப்பணிகளோடும் எமது முன்னோர்கள் தொடர்பில் இருந்தவர்கள் ஆவர். எம்முடைய முப்பாட்டனார்கள் திரு.சடையப்ப சுவாமிகள் மற்றும் திரு.மாணிக்க சுவாமிகள் என்ற இருவரால் இந்த கோயில் பல ஆண்டுகளுக்கு முன் நிர்மாணிக்கப்பட்டது. பின்பு எமது சகோதரர் திரு.M.S.சம்பந்தன் நிர்வாக தர்மகர்த்தாவாக இருந்து 27.04.1966, பின்பு 27.08.2000 ஆகிய தேதிகளில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இத்தலம் திருக்கோயில் வழிபாட்டோடும், சிவயோகியின் அடக்கஸ்தலமாகவும் வழிபடப்பட்டு வருகிறது. இதற்கு அடையாளமாக திருக்கோயில் மண்டபத்தில் சிவலிங்கம் நந்தி இடம் பெற்று வழிபடப்படுகிறது.

மேலும் இங்கு பைரவ இயந்திரம் நிர்மாணிக்கப்பட்டதும் திருக்கோயிலில் சுவாமிகள் அருள்வாக்கு வழங்குவதும் முன்பு திருக்கோயிலோடு தொடர்புடைய சிவயோகி அல்லது சிவசித்தர் இங்கு வாழ்ந்து இப்பகுதி மக்களுக்கு அருள் வழங்கியதன் தொடர்ச்சியே எனலாம்.

இத்திருக்கோயிலின் பிரகாரத்தில் இடம் பெற்றுள்ள காசிவிசுவநாதர் பைரவரின் காசி தலத்தில் கால பைரவராக இடம் பெற்றுள்ளதை நினைவூட்டுகிறது. தகட்டூரின் அருகில் செயல்பட்ட தகளபுரீஸ்வரர் தேவஸ்தானத்தில் எழுந்தருளியிருந்த தகளபுரீஸ்வரர் அத்திருக்கோயில் வழிபாட்டு மரபிலிருந்து விடுபட்டதன் விளைவாக இத்திருக்கோயிலில் லிங்கத் திருமேனி கொண்டு அருள்பாலிக்கிறார்.

கோயில் திருக்குளத்திற்கு அப்பால் அருள்மிகு இராவுத்தசாமி, காத்தாயி, கருப்பாயி உடன் இத்தலத்தின் காவல் தெய்வமாக எழுந்தருளியுள்ளார். இத்திருக்கோயில் பற்றி முதல் வரலாற்று நூலாக இந்த நூல் வெளிவருவது மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது. நூலாசிரியருக்கு எனது வாழ்த்துக்களையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்

**எம்.எஸ்.அமிர்தகடேஸ்வரன்**
முன்னாள் ஊராட்சி மன்றத் தலைவர்
தகட்டூர்
வேதாரணியம் தாலுக்கா
நாகப்பட்டினம் மாவட்டம்
நாள் : 09.02.2021

## 1. சைவம் ஓர் அறிமுகம்

தொன்மைச் சமுதாய நிலையில் எழுந்த கடவுள் சிந்தனை நாளடைவில் "சமயம்" என்ற நிறுவன நிலைக்கு வளர்ந்தது. மனித குழுக்களுக்கு ஏற்பச் சமயம் பல்வேறாகப் பெருகின. இவ்வாறு எழுந்த சமயங்களுள் சைவமும் ஒன்று, சைவத்தின் முழு முதற் கடவுள் சிவன். இக்கடவுளை உடைய சமயம் கால ஓட்டத்தில் சமுதாயம் பெற்ற வளர்ச்சிக்கு ஏற்ப பல்வேறு உட்பிரிவுகளையும், வடிவங்களையும் உடையதாக மாற்றம் பெற்றது.

**சிவன் :**

சிவந்தவன் என்ற தமிழ் சொல்லின் அடிப்படையில் சிவன் என்ற வழக்கு எழுந்ததாகச் சொல்லப்படுகிறது. வடமொழியில் முழுமையானது, மங்களகரமானது என்ற பொருளில் சிவன் என்பதற்கான பொருள் உள்ளதாக அறிகிறோம். சிவன் முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்து நிற்பவன், ஐந்தொழில்கள் என்று சொல்லப்படும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் பணிகளுக்கு அடிப்படையான ஓம் என்ற பிரணவ மந்திரத்தை தமது உடுக்கையிலிருந்து உருவாக்கியவர். ஆணவம், கன்மம், மாயை என்ற ஆன்மாக்களின் மும் மலங்களை போக்கி வீடுபேறு அருளக்கூடியவர், என்றும் உள்ளவர் எங்கும் நிறைந்தவர், எல்லாம் அறிபவர், எல்லாம் வல்லவர், தூயவர், அழிவிலாதவர், இன்பத்தைத் தருபவர், பிறவற்றுக்கு ஆட்படாதவர் என்று சிவப்பரம்பொருளின் தன்மை கூறப்படுகிறது.



தமிழ்நாட்டில் பின்பற்றப்படும் சைவ சமயம், சைவ சித்தாந்தம் என்ற பெயரால் அறியப்படுகிறது. சைவ சித்தாந்தம் என்பது சைவ சமயத்தின் முடிந்த நிலை அல்லது முடிந்த முடிவு என்று பொருளுடையது. திருமூலரின் திருமந்திரத்தில் ஆறு வகைச் சைவ சமயங்கள் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. அவைகள் :

1. பாசுபதம் (குஜராத்தில் பின்பற்றப்படுவது)
2. கபாலிகம்
3. மாவிரதம்
4. வாமம்
5. பைரவம் (அ) வயிரவம்
6. ஐக்கியவாத சைவம்

எனவே திருமூலர் காலத்தில் சைவம் ஒற்றை மதமாக இல்லாமல் ஆறு பெரும் பிரிவுகளாக இருந்துள்ளது. சைவ சித்தாந்தத்தில் பதி என்ற இறைவனை பசு என்ற உயிர்கள் அடையமுடியாமல் பாசம் என்ற தளைகள் தடுப்பதால் உயிர்கள் பாசம் என்ற தளைகளிலிருந்து விடுபட்டு இறைவனை அடையும் மார்க்கத்தை வெவ்வேறு வழிகளில் மேலே கண்ட ஆறு சமயப்பிரிவுகளும் விளக்குகின்றன.

சிவன் முப்புரங்களை எரித்ததனால் அவன் முதன்மை தெய்வமானான் என்பார்கள். முப்புரம் என்பது வித்தியுன்மாலி, தாரகாட்சன், கமலாட்சன் என்ற மூன்று அசுரர்கள் தாங்கள் பெற்ற வரத்தால் முறையே பொன்னால், வெள்ளியால், இரும்பால் ஆன மூன்று பறக்கும் கோட்டைக்குள் இருந்து தேவர்களுக்குத் துன்பம் விளைவித்தனர்.

தேவர்கள் சிவனிடம் முறையிட சிவன் அவர்களை அழித்தொழித்தார். சிவனின் எட்டுவீரச் செயல்களில் சிறப்பாகக் குறிப்பிடப்படுவது முப்புரம் எரித்த கதை. முப்புரம் என்பது உண்மையிலேயே மும்மலங்களைக் குறிப்பதாகும். அதனை திருமூலர் ஆணவம், மாயை, கன்மம் என்கிறார். மேலும்,

ஆணவம் மாயையும் கன்மமும் ஆம்மலம்
காணும் முளைக்குத் தவிடு, உமி ஆன்மாவும்
தாணுவை ஒவ்வொமல் தண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே
(திருமந்திரம் 2192) திருமந்திரம் 2192

இந்தப்பாடலுக்கு திரு.கரு.ஆறுமுகத் தமிழன் கீழ்க்கண்டவாறு

விளக்கத்தைத் தருகிறார்.

அரிசியை உமி (Husk), தவிடு (Bran), முளை (Germ) ஆகியன பற்றி நிற்பது போல, உயிரை ஆணவம், மாயை, கன்மம் ஆகியன பற்றி நிற்கின்றன. இவை பற்றி நிற்பதால் உயிர் இறைவனை அடையாமல் இருக்கிறது. அரிசியை பற்றியிருக்கும் உமி, தவிடு, முளை ஆகியவற்றை அவித்தும், குற்றியும், தீட்டியும் நீக்குவது போல் உயிரைப் பற்றியிருக்கும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களை நீக்கினால் உயிர்கள் இறைவனடி சேரும்.

ஆணவம் என்பது அறியாமை, உயிர்கள் கொண்டுள்ள அறிவாற்றலைப் பரந்து விரிய விடாமல் தடுப்பது இந்த அறியாமை ஆகும். அறிவை அணுத்தன்மைபடுத்துவதால் அது ஆணவம். திமிர் என்பது ஆணவத்தின் ஒரு கூறு, அறியாமையின் விளைவு. பாசிபடிந்த பச்சை ஏறிய பித்தளை விளக்கு துலக்கத் துலக்க பாசி நீங்கித் துலங்குவது போல், அறிய அறிய உயிர் ஆணவம் நீங்கி அறிவு பெற்றுத் துலங்கும்.

மாயை என்பது சடப்பொருள். அது உடம்பாகவும், உலகமாகவும், உயிர்கள் வாழ புகலிடம் தந்து நிற்பது, ஐம்புலன்களையும் அவற்றால் அறியப்படும் பொருள்களையும் உருவாக்கித் தருவது. உயிர்கள் ஐம்புலன்களால் மெய்யறிவையும், பேரின்பத்தையும் தேட தடையாக இருக்கும் பொய்யறிவையும் சிற்றின்ப வேட்கையையும் தருவது மாயை.

நல்வினை, தீவினை என்று மனத்தால், மொழியால், உடம்பால் நாம் செய்கின்ற வினைகள் கன்மம் எனப்படும். இப்படி வினைகளைப் பற்று வைத்து செய்கையில் அதன் விளைவுகள் நம்மை பற்றிக் கொள்கின்றன. ஆகவே வினைகள் பற்றில்லாமல் செய்யும் போது கன்மம் நீங்குகிறது. ஆகவே ஆணவம், மாயை, கன்மம் இவற்றை நீக்கி இறையருள் சேர்வதற்குச் சைவ சமய பிரிவுகள் உதவுகின்றன.

திருமூலர் கால சைவம் ஆறு பெரும்பிரிவுகளோடு விளங்கி இருந்த நிலையில் அதிலிருந்து இன்னும் பல பிரிவுகள் தோன்றின.

1. சித்தாந்த சைவம் (தமிழ்நாடு)



2 காசுமீரசைவம் (சங்கரரின்

அத்வைதத்தையொட்டிக் காஷ்மீரில் புகழ்பெற்றது)

3. வீர சைவம் (கர்நாடகம் லிங்காயத்)

4. உருத்திர சைவம்

5. சம்மேள சைவம்

6. மார்க்க சைவம்

7. பௌராணிக சைவம்

8. அசுத்த சைவம்

9. கடும்சுத்த சைவம்

10. கௌமாரம்

11 காணாபத்தியம்

12 சாக்கதம்

13 சௌரம்

இத்துடன் 14. பேதவாத சைவம்,15.பாடாணவாத சைவம், 16.சிவ சங்கிராந்த சைவம், 17.ஈசுவர அவிகார சைவம்,18. ஊர்த்துவ சைவம்,19.அனாதி சைவம், 20.ஆதி சைவம்,21. மகாசைவம், 22.பேத சைவம், 23. அபேத சைவம், 24. அந்தர சைவம், 25. குண சைவம், 26. நிர்க்குண சைவம், 27. அனுசைவம், 28. கிரியா சைவம், 29. நாலுபாத சைவம் என்று பல பிரிவுகளாக விளங்கியமையை அறிய முடிகிறது. சைவத்தின் தனிப்பெரும் தலைவனான சிவனை, கருத்தியல் நிலையிலும், வழிபாட்டு முறையிலும் பலவாறாகக் கொண்டு இந்த பிரிவுகள் தோன்றியது எனலாம்.

சைவம் என்பதற்கு திருமூலர் கீழ்கண்டவாறு வரையறை தருகிறார்.

“சைவம் சிவனுடன் சம்பந்தம் ஆகுதல்
சைவம் தனை அறிந்தே சிவம் சாருதல்
சைவம் சிவம் அன்றிச் சாராமல் நீவுதல்

சைவம் சிவானந்தம் சாயுச் சியமே''

திருமந்திரம் 1512

திரு.கரு.ஆறுமுகத்தமிழன் அவர்களின் மலை, மரம், உடம்பு கட்டுரையில் (தமிழ் தி இந்து ஆனந்தஜோதி நாள்.24.05.2018) இப்பாடலுக்கு கீழ்க்கண்டவாறு விளக்கம் தருகிறார்.

''சைவம் என்பது சிவனை வணங்குதல் மட்டுமின்றி தான் யார் என்று அறிந்து, சிவம் யார் என்று உணர்ந்து சிவத்தையே சார்ந்து கொள்ளுதல் சைவம். சிவத்தைச் சார்ந்து கொண்டபின் வேறெதையும் சாராமல் விலகி நிற்றல் சைவம், சிவ இன்பத்தில் தோய்ந்திருத்தல் சைவம், சிவத்துக்குள் ஒன்றிப் போதலே சைவம் என்ற வரையறையை மேலே கண்ட திருமந்திரம் பாடல் மூலம் அறிய முடிகிறது''என்று குறிப்பிடுகிறார்.

**பாசுபதம் :**

சிவன் யோக ஆசிரியனாக வந்து ஞானத்தைத் தருபவன். உயர்ந்த பாசுபத நெறி ஞானம் எனப்படும். இப்பிரிவு வேதங்களைச் சார்ந்தது, பின்னர் லகுலீசர் என்பவரால் புதுப்பிக்கப்பட்டது. இவர்கள் சுடுகாட்டுச் சாம்பலை மேனி முழுவதும் பூசி பைரவரை வழிபாடு செய்பவர்.

வீடுபேறு அடைய நல்ல குருவின் வழிகாட்டுதல் வேண்டும். நல்ல குருவிற்கு தகுதியான சீடன் அமைய வேண்டும். இறைவன் சிவபெருமான் நல்ல சீடர்களை வழிநடத்த குருவாக மனித உருவில் குஜராத் மாநிலத்தில் காயாவரோஹணம்(கார்வான்) என்ற இடத்தில் பிராமண குலத்தில் பிறந்தார். அவர் உஜ்ஜையினியில் தங்கி நல் உபதேசங்களைச் சீடர்களுக்கு வழங்கினார். அவ்வாறு குருவாய் தோன்றியவர் பெயர் லகுலீசர். அவர் தோற்றுவித்த சைவப்பிரிவு பாசுபதம் எனப்பட்டது.

லகுலீசரின் சமயத் தத்துவங்கள் பாசுபத சைவம் எனப் பெயர் பெற்றன.

மனிதர்க்கு அறிவும், ஆற்றலும் நிறைந்து உள்ளன. ஆனால், அவர் தனது ஆற்றலைச் செலுத்த இயலாது, உலகியல் இன்பங்களால் கட்டப்பட்டு வலுவிழந்து வாழ்கிறார்கள். இதையே பந்தம், கட்டு என்று அழைக்கின்றோம். இப்பந்தங்களால் கட்டப்பட்டு வாழ்வதையே பசு என்றழைக்கின்றோம். பசுக்களாக



வாழும் மனிதன் தனது முழுவலிமையையும் பெற்று திகழ வேண்டுமேயென்றால் அவனைக் கட்டியிருக்கும் பந்தங்களை அறுத்து வெளிவர வேண்டும். அப்படிப்பட்ட நிலையைப் பதியாகிய இறைவன் சிவபெருமான் ஒருவனால் தான் வழங்க முடியும். எனவே அப்பெருமான் காட்டியது பாசுபதயோகம் ஆகும். பாசுபத யோகம் என்பது பதி, பசு, பந்தம், யோகவிதி, துக்காந்தம் என்ற இந்த ஐந்தின் அடிப்படையில் இயங்கக்கூடியது. இதனை பஞ்சார்த்த ஞானம் என்பர்.

**அருள்மணித் தடம்பூண் முலை**
**அரம் பையரோடு**
**அருளிப்பாடியர் உரிமையில்**
**தொழுவார்**
**உருத்திரப் பல்கணத்தார்**
**விரிசடை விரதிகள், அந்தணர்**
**சைவர், பாசுபதர், காபாலிகர்**
**தெருவினில் பொலியும் திருவாரூர் அம்மானே**

**(அப்பர் தேவாரம்)**

திருவாரூர் திருவிழா நடைபெற்ற போது தெருவில் அந்தணர், சைவர், பாசுபதர், காபாலிகர் என்போர்கள் உலா வந்ததாகக் குறிப்பிடுகிறார் அப்பர் பெருமான்.

மாவிரதம் :

உயிர்கள் பந்தங்களிலிருந்து விடுபட சாத்திரங்கள் கூறும் முறையில் தீட்ஷை பெறுதல் வேண்டும். எலும்பு மாலை அணிதல் போன்ற வழக்கங்களை மேற்கொள்ள வேண்டும். அப்போது வீடு பேற்றிற்குரிய தகுதிகளை ஒருவர் பெறுவர். இப்பிரிவினர் பைரவரை பரம்பொருளாகக் கொண்டு பிச்சை ஏற்று வாழும் நடைமுறையைக் கொண்டவர்கள்.

கபாலிகம் :

சாத்திரங்கள் கூறும் முறையில் தீட்ஷை பெற்றால் உயிர்கள் மாயை கன்மம் போன்றவற்றிலிருந்து விடுபடலாம். பச்சைக் கொடி கொண்டு மனித தலையோட்டில் பிச்சை ஏற்று உண்பவர் காபாலிகர். இவர்களின் வழிபடு தெய்வம் பைரவர் ஆவார். பைரவரே உலகை படைத்து, காத்து, அழிப்பவர். மற்ற

தெய்வங்கள் பைரவர் கூறாக இருந்து அவரது கட்டளைகளை நிறைவேற்றுபவர், என்பது இப்பிரிவினரின் நம்பிக்கை.

**வாமம் :**

உலகம் அனைத்தும் சக்தியின் வளர்ச்சியாகும். இவர்கள் பைரவரையும், பைரவியையும் வணங்குபவர்கள். உலகியலில் செய்வனவற்றை எல்லாம் இறைச் சிந்தனையோடு செய்ய வேண்டும் என்பதே இவ்வழிபாட்டின் அடிப்படைக் கொள்கையாக உள்ளது.

**பைரவம் :**

இப்பிரிவினர் பைரவரே பரம்பொருள், அவரின் திருவடியில் சேர்வதே வீடுபேறு என்ற நிலையினைக் கொள்பவர். பைரவரிடமிருந்து எட்டுத் தலைகள் தோன்றி உயிர்களுக்கு பந்தமும், வீடும் அளிக்கும். நரபலியிடுதல், மண்டையோட்டில் உணவருந்துதல், மது அருந்துவது போன்றவற்றை இப்பிரிவினர் மேற்கொள்வர்.

**ஐக்கிய வாத சைவம் :**

உயிர்களுக்கு மாயை, கன்மம் என்ற இரு மலங்களே (அதாவது பாசம்) உள்ளன. ஆணவம் என்பது இல்லை. மாயை மற்றும் கன்மத்தால் உயிர்கள் கட்டப்பட்டு தம் பாவ புண்ணியங்களுக்கு ஏற்ப உடலையோ, கருவியையோ, உலகையோ பெறும். இவர்கள் மும்மலங்களில் ஆணவத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. உயிர்கள் இயற்கையிலேயே அறிவுள்ளது என்ற கொள்கையினை உடையவர்கள்.

**சைவ சித்தாந்தம் :**

சைவ சித்தாந்தம் பேசும் பொருள்கள் மூன்று. அவை பதி, பசு, பாசம் ஆகியவையாகும். பதி என்பது இறைவனையும், பசு என்பது உயிர்களையும், பாசம் என்பது உயிரோடு ஒட்டிக் கொண்டு இறைவனை அடைய தடையாக இருக்கும் நிலை. இங்கு இறைவன் என்பது சிவனை மட்டுமே குறிக்கும். பாசம் என்பதைத் தளை என்றும் மலம் என்றும் குறிப்பர்.

உயிர்கள் ‘பதி’யாகிய இறைவனை அடைய தடையாக நிற்கும் பாசத்தை ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றாக வகுப்பார்கள். இதில் ஆணவம் என்பது செம்பில் களிம்பு ஒட்டியுள்ளது போல உயிரோடு ஒட்டி இருப்பது. இந்த ஆணவம் உயிர் இறைவனை உணர்வதற்குத் தடையாய் இருக்கும். உயிர்கள் சிற்றின்ப நெறியிலிருந்து விலகி பேரின்ப நெறியினை அடையும் போது ஆணவம் ஒடுங்கி உயிர் இறைவனை அடையும். கன்மம் என்பது உயிர்கள் செய்யும் செயல்களைக் குறிக்கும். இதனை விதி என்றும், வினை என்றும் குறிப்பார்கள். இந்த உயிர்கள் செய்யும் செயலைப் பொறுத்துதான் மறுபிறப்பு அமையும்.



மாயை என்பது ஒரு மூலப் பொருள். இந்தப் பொருளிலிருந்து தான் இறைவன் உலகத்தையும், அதன்கண் உயிர்கள் நுகரும் பொருட்களையும் படைத்தார். இது சங்கரரின் மாயாவாதத்திலிருந்து வேறுபட்டது.

சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கை இறைவன் வேறு, உயிர்வேறு என்பதுதான். கடவுளும் அனாதி, கடவுளை அடையத் துடிக்கும் உயிரும் அனாதி, கடவுளை உயிர் அடைய தடைபோடும் பாசமும் அனாதி. இங்கு அனாதி என்பது தொன்று தொட்டு இருந்து வருவதாகும். ஆனால் அந்த உயிரில் இருப்பவன் இறைவன். இறைவன் இன்றி உயிர் இயங்காது.

**சைவத்தில் பைரவர் :**

சிவபெருமானை முழுமுதற்கடவுளாகவும், பரம்பொருளாகவும் கொண்டு வழிபடும் சமயம் சைவம். இதனை தமிழர்களின் சமயம் என்று மறைமலையடிகள் அவர்கள் குறிப்பிடுவார். பைரவர் வழிபாடு என்பது சைவ சமய வழிபாடுகளுள் ஒன்றாகும். பைரவர் சிவனின் உருவமாகவும், சில சமயம் சிவனின் உடலிருந்து தோன்றிய சக்திமிக்க உருவமாகவும் குறிப்பிடப்படுகிறது. நின்ற நிலையில் அனல் மகுடத்துடன், உருட்டு விழிகளுடன், சினத்தை வெளிப்படுத்தும் கோரைப்பற்களுடன், உடுக்கை, சூலம் முதலான ஆயுதங்களுடன், கபால மாலை அணிந்து நாய் வாகனத்தை உடைய தோற்றத்தைக் கொண்டவர் பைரவர். பைரவர் என்பதற்கு பயங்கரமானவர், பயத்தை நீக்குபவர், பக்தர்களின் பாவத்தை போக்குபவர் என்று பொருள். படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலைக் குறிக்கும் வகையில் பைரவர் என்ற பதம் பொருள் கொள்ளப்படுகிறது. வைரவர் என்பது பைரவர் என்பதனின் மருவிய வடிவாகப் பார்க்கப்படுகிறது. பக்தர்களுக்கு வைரத்தாலான கோட்டை போன்று காவல் காப்பவராக விளங்குவதால் சிவனின் பைரவக் கோலம் வைரவர் என்று அழைக்கப்பட்டதாகக் கருதுவர்.

பீ என்றால் அச்சம், ரவம் என்றால் ஆரவாரம், அல்லது பேரொளி, அவற்றை எழுப்பி அவற்றை அடக்கியவர் என்பதால் பீரபம் என்ற மேற்கோள் ஏற்பட்டு அது பைரவர் என்று மாறித் தமிழ்நாட்டில் பைரவர்,வயிரவர் என்ற பெயர்களில் வழங்கப்படுகிறது.

மேலும் ப,ர,வ என்கிற மூன்று எழுத்துகளுக்கும் இரகசிய தத்துவார்த்தமான பொருள்கள் உண்டு. 'ப' என்பது அழித்தலையும்,'ர' என்பது காத்தலையும்,'வ' என்பது படைத்தலையும் குறிக்கின்றன. எனவே பைரவம் என்னும் சொல் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலையும் செய்யக் கூடிய ஆற்றலாகக் கருதப்படுகிறது.

வடஇந்திய பைரவத்திற்கும், தென்னிந்திய பைரவத்திற்கும் சில வேறுபாடுகள் உள்ளன. வட இந்தியாவில் ஒருவர் தன்னை பைரவர் என்று கூறிக் கொண்டு நீண்ட சடைமுடி, சூலம், மண்டையோட்டுடன் தன்னை துர்க்கையின் போர்வீரன் என்று கருதிக்கொண்டு சடங்குகளில் ஈடுபடுவர். தென்னிந்தியாவில் பைரவரை ஒரு தனிப்பட்ட தெய்வமாக வழிபடுவர். அவர் சிவனின் ஓர் வடிவமாகவும், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்டப் பணியைச் செய்வதற்காக சிவன் பைரவராகத் தோன்றியுள்ளார் என்பர்.



## உ.பைரவரும், அவர் தோற்றமும்

சமய வழிபாட்டில் சைவ சமயத்தின் மூலப் பரம்பொருளான சிவன், உலகில் தீ நெறி தோன்றுகின்ற பொழுது அவற்றை அழித்து உலகை நன்னெறியில் நிறுத்துவதற்குப் பல வீரத் திருவுருவங்களை எடுத்து வீரச் செயல்களையும் செய்து (அட்டவீரட்டானம்) முடிப்பதாகக் கூறப்படுகிறது. இவ்வாறு சைவ சமயத்தில் தோன்றிய சிவமூர்த்தங்கள் '64 உருவங்கள்' ஆகும். இந்த அறுபத்து நான்கு உருவங்களுள் பைரவ மூர்த்தம் முப்பத்தெட்டாவது மூர்த்தமாக வணங்கப் பெறுகிறது.

**தோற்றம் :**

இந்தியாவின் பழமையான நாகரிகமான சிந்துவெளி நாகரிகத்தில் சிவலிங்க வழிபாடு மற்றும் தாய்த்தெய்வ வழிபாடு இருந்துள்ளது. அதுபோன்று பண்டைய தமிழர் வழிபாட்டில் காவல் தெய்வ வழிபாடும், கன்னித் தெய்வ வழிபாடும் நிலவி வந்துள்ளது. இந்நிலையில் இறைவனை மனிதவடிவில் வழிபடத் தொடங்கிய மக்கள் இறையாற்றல், மனிதவடிவில் இறங்கி வருவதாக நம்பத் தொடங்கி, அதன் தொடர்ச்சியாக வேலன் வெறியாடல் போன்ற வழக்குகள் பண்டைய தமிழகத்தில் எழுந்தது. "தமிழ்நாட்டில் பைரவ வழிபாடு" எனும் நூலின் ஆசிரியர் முனைவர் திரு.நாகப்பநாச்சியப்பன் "பைரவ வழிபாடு என்னும், சைவ சமய வழிபாடு நம் பண்டைய தமிழர் வீரவழிபாட்டின் தொடர்ச்சியாகச் சமய வழிபாட்டின் கலப்பில் தோன்றிய வழிபாடாகும்" எனக் குறிப்பிடுகிறார்.

சிவபெருமானின் ஒரு கூறாக விளங்கும் பைரவர்

பற்றிச் சில கதைகள் வழங்கப்படுகின்றன. அக்கதைகளின் வழி அறியப்படும் பைரவ வடிவங்களின் பெயர்கள் கீழ்க்கண்டவாறு அமைகிறது.

**பிரம்ம சிரச்சேதர் :**

கூர்மபுராணப்படி சிவனுக்கும் ஐந்து தலைகள், பிரம்மாவிற்கும் ஐந்து தலைகள் இருந்த நிலையில், தானே சிறந்தவன் என்ற செருக்கு கொண்டு பிரம்மன் செயல்பட்டதனால் சிவனின் கோபத்திற்கு ஆளாகி சிவனின் உக்கிர சக்தி ஒன்று பைரவராகத் தோன்றி பிரம்மனின் ஐந்தாவது தலையைக் கிள்ளி எறிந்தது. இந்த பைரவ வடிவமே பிரம்ம சிரச்சேதர் என்ற பெயரில் வழிபடப்படுகிறது.

இவை வேறு விதமாகவும் சொல்லப்படுகிறது. சிவனின் அடிமுடி தேடுதலின்போது பொய்சொன்ன பிரம்மனின் தலையை பைரவர் கிள்ளி எறிந்தார். இதனால் பிரம்மஹத்தி தோஷத்திற்கு பைரவர் ஆளானார். கையில் கபாலத்துடன் சுற்றித் திரிந்து பின்பு காசியில் கபாலம் நீக்கப் பெற்று காசிவிசுவநாதர் அருளின்படி காலபைரவராகக் காசியில் விளங்கினார் என்று வராஹபுராணம் தெரிவிக்கிறது.

**சரபேசர் :**

இரணிய வதம் முடித்த பின்னர் கோபமும் வெறியும் குறையாத நரசிம்மத்தை, பறவை போன்ற யாளி முகம் கொண்ட சரபமாய்க் கொன்று அழித்து அதன் தோலைப் போர்த்திக் கொண்டதால் சரபேசர் என்று அழைக்கப்படுகிறார்.

**அந்தகாசுரசம்ஹாரர் :**

இரணியாட்சன் மகனாகிய அந்தகாசுரன், சிவனைத் தவிர தன்னை யாராலும் வெல்ல முடியாத வரம் பெற்று தேவர்களை அழிக்க முற்பட்டபோது சிவன் பைரவமூர்த்தியாய் சென்று அந்தகாசுரனைக் கொன்று தேவர்தம் குறைகளை நீக்கினார். அதனால் அந்தகாசுரசம்ஹாரர் எனப் பெயர் பெற்றார்.

**சட்டைநாதர் :**

திருமால் வாமன உருக்கொண்டு மகாபலிச் சக்கரவர்த்தியின் கர்வத்தை அடக்கினார். பின் திருமால் மதம் பிடித்து உலகை அழிக்க முற்பட்ட போது, சிவபெருமான் பைரவக் கோலம் கொண்டு திரிவிக்ரமனை உரித்துத் தோலைப் போர்த்திக்



கொண்டார். இவர் தோலைச் சட்டையாகப் போர்த்திக் கொண்டதால் சட்டைநாதர் எனப் பெயர் பெற்றார். சீர்காழியில் சட்டைநாதருக்கு தனிக் கருவறை உண்டு.

திருவிக்கிரமனின் முதுகெலும்பையே சிவபெருமான் வீணாதண்டமாகக் கொண்டதால் வீணாதார மூர்த்தி என்னும் பெயரால் அழைக்கப்பெற்றார். மேலும் தண்டபாணி, கங்காள பைரவர், வடுகர், வடுகேசர் என்றும் பைரவர் குறிப்பிடப்படுகிறார்.

**ஆபதுத்தாரணர் :**

ஊழிப்பொழுதில் ஏற்பட்ட பிரளயத்தில் உலகம் அழிந்தபோது சிவபெருமான் பைரவர் உருக்கொண்டு உலகத்து உயிர்களைக் காத்து நின்றார். உயிர்களை ஆபத்திலிருந்து காத்ததால் பைரவருக்கு ஆபதுத்தாரணர் என்ற திருப்பெயர் ஏற்பட்டது.

பிரளயத்தின்போது பைரவர் தோணியப்பர் என்ற திருப்பெயரால் உலக மக்களைக் காத்ததால் தோணியப்பர் என்று வழங்கப்பெற்றார். தோணியப்பர் வடிவமே ஆபதுத்தாரணர் ஆவர். சீர்காழியில் ஆபதுத்தாரணாருக்குத் தனிக் கருவறை உள்ளது.

**கங்காள பைரவர் :**

கால்களில் கட்டையால் ஆன காலணிகளை அணிந்திருப்பார். வலக்காலைத் தூக்கி வைத்தது போல் இருப்பார். வெண்மை நிறத்துடன் கற்கள் பதித்த கவசம் அணிந்து ஜொலிக்கும் சடாமுடியுடன் தலையின் வலப்புறத்தில் பிறைச் சந்திரன், இடப்புறத்தில் ஊமத்தை மலரும் சூடியிருப்பார். உலகம் தனித்தனியாகக் கூறுபட்டு அழியாமல் காப்பவர் கங்காள பைரவர் ஆவர். எலும்பும், கபாலமும் ஏந்திய திருவுருவத்துக்குக் கங்காளத் திருவுருவம் என்று பெயர். கங்காளம் என்றால் எலும்புக்கூடு. எலும்பையும், கபாலத்தையும் மூட்டையாகக் கட்டி அதை வலம்பம் என்ற முதுகெலும்புக் கழியில் கோத்துக் காவடியாக தோளில் சுமந்தவர் சிவபெருமான்.

**ஸ்வர்ணகர்ஷண பைரவர் :**

மஞ்சள் நிறமானவர், மூன்று கால்கள், நான்கு கைகள், மஞ் சள் நிற உடையுடன் காணப்படுவார். இவர் கையில் தங்கத்தால்

ஆன கபாலம் இருக்கும். அதில் நவரத்தினங்கள் நிரம்பி வழியும், தோள்களில் தண்டத்தையும், திரிசூலத்தையும் தாங்கி நிற்பார். நாய்வாகனம் இன்றி இருப்பார். தவிர பக்தர்களுக்குச் சகல சித்திகளையும், செல்வத்தையும் வழங்குபவர். தேவர்கள் இவரை வணங்குவர்.

**க்ஷேத்திரபாலர் :**

க்ஷேத்திரமாகிய திருக்கோயில், புண்ணிய நதிகள், தூய தவச்சாலை, இவையெல்லாம் பைரவரின் காவலுக்கு உட்பட்டவை. காவல் தெய்வமாக நின்று, உறையும் மக்களைக் காத்தல், காசியை காக்கும் காவல் தெய்வமாக காலபைரவர் விளங்குவதால் இவற்றின் வாயிலாக க்ஷேத்திரபாலர் என்ற திருப்பெயர் ஏற்பட்டது.

சகல உலகங்களையும் அதில் அமைந்துள்ள திருத்தலங்களையும் அதன் தீர்த்தங்களையும் காவல்புரிபவர் பைரவர். எனவே மேலே குறிப்பிட்ட க்ஷேத்திரங்களைக் காவல்புரிவதால் ஷேத்திரபாலர் எனப்பட்டார்.

**வடுகநாதர் :**

அமைதியும், இளமையும், கருணையும், அருளும் வடிவம் கொண்டு அழகு மிளிரும் சாந்தமான சொரூபம் உடையவர் முண்டாகசுரனென்ற அசுரனைக் கொன்று தேவர்களைக் காத்தவர். சிவப்பு நிறமுடைய இவர் மூன்று கண்களையுடையவர்.

**பைரவர் தோற்றம் :**

சிவபெருமான் வலிமைமிக்க மூர்த்தியாக பைரவரை தோற்றுவித்து, இவ்வுலகைக் காக்கும் பொறுப்பினை அவரிடம் ஒப்படைத்தார். அசூரர்கள் தொல்லையால் இந்த உலகம் துன்பப்பட்ட பொழுதெல்லாம் சிவன் தனது அம்சமாக பைரவரைத் தோற்றுவித்து மக்களைக் காத்து நிற்பதாகக் கூறுவர்.

**இதர பெயர்கள் :**

உக்ரபைரவர், பைரவர், வடுகர், கந்தகன், கரிமுக்தன், நிர்வாணி, சித்தன், காபாலி, வானுகன் என்று பல பெயர்களில் விளங்குகிறார்.

**பஞ்சகுமாரர்கள் :**

சிவபெருமானின் பஞ்சகுமாரர்களாக பைரவர், கணபதி,



முருகன், வீரபத்ரர், ஐயனார் குறிப்பிடப்படுகிறார்கள்.

**பௌத்தம் :**

பௌத்த சமயத்தில் 84 வகை வயிரவத் திருவுருவங்களைத் திபெத்திய பௌத்த நூல்கள் குறிப்பிடுகின்றன. வஜிராயன பௌத்த நூல் வஜிர பயிரவரையும் அவரது சக்தி வஜிராவகியையும் குறிப்பிடுகிறது.

**சமணம் :**

சமணத்தில் தொண்ணூற்றாறு வயிரவர் கோலங்கள் குறிக்கப்படுகின்றன. சமணத்தில் நாள்வழிபாட்டில் இறுதியில் க்ஷேத்திரபாலகர் என்ற பைரவருக்குப் பூஜைகள் நடத்தப்படுகின்றன. இரவிலும் இறுதியாக இவருக்கான பூஜைகள் நடைபெறுகிறது. நாள்தோறும் பஞ்சபைரவர் வைராவிச்சேவை என்ற ஐந்து பைரவர்கள் வழிபடப்படுகின்றனர். அவர்கள் விஜய பத்ரர், வீரபத்ரர், மணிபத்ரர், ஸ்ரீபைரவர், அபராஜிதர் என்ற பெயர்களில் க்ஷேத்திர பாலகராக வழிபடப்படுகின்றனர்.

திருக்கோயில்களையும், அதில் அருள்பாலிக்கும் இறைவனையும் பாதுகாத்து அதற்காக தமது இன்னுயிரையும் கொடுக்க உறுதிபூண்ட பலர் தமிழகத்தில் இருந்துள்ளனர். இவ்வாறு பைரவருக்குச் சேவை செய்தவர்கள் பைரவரின் அம்சமாகவே போற்றப்பெற்றனர். இவர்கள் பணியின் போது உயிரிழந்ததால் வயிரவப் பெருமான், வயிரவக் கோன் எனப் பெயரிட்டு வழிபடப்பட்டனர். இவர்களின் வாரிசுகளுக்கு உதிரப்பட்டி என்ற பெயரில் நிலதானம் கொடுக்கப்பட்டுள்ளது.

**பலநிலை பைரவர்கள் :**

எல்லா இறைவனையும், சிவனாகவே காண்பது சைவ சமயத்தினரின் பண்பு, சிவன், விநாயகராகவும், முருகனாகவும், அம்பாளாகவும், சூரியனாகவும் தோன்றி அருள் செய்வதாக சைவத்தினர் கூறுவர். அந்தவகையில் சூரியனுக்கான திருக்கோயிலில் இடம்பெரும் பைரவர் மார்த்தாண்ட பைரவர் என்றும், முருகனுக்கான திருக்கோயிலில் இடம் பெரும் பைரவர் குமார பைரவர் என்றும், விநாயகர் திருக்கோயிலில் எழுந்தருளும் பைரவர் பிரமோத பைரவர் என்றும், திருமால் தலத்தில் எழுந்தருள்பவரை முகுந்த பைரவர் என்றும் அழைப்பர். வாமம் அல்லது சாக்தத்தில் 64 வகை பைரவர்கள் சொல்லப்படுகின்றது.வைணவ சமயத்தில் சக்கரத்தாழ்வார்

உருவில் பைரவர் வழிபடப்படுகிறார்.

**ஆண்டப்பிள்ளையார் :**

சைவ சமயத்தில் விநாயகருக்கு மூத்த பிள்ளையார், முருகனுக்கு இளைய பிள்ளையார், திருஞானசம்பந்தருக்கு ஆளுடைய பிள்ளையார், சண்டிகேசுவரருக்கு சேஞ்சலூர் பிள்ளையார் என்று இருப்பது போல், பைரவருக்கு ஆண்டப்பிள்ளையார் என்ற பெயருண்டு.

**பைரவரின் வடிவங்கள் :**

சிவபெருமானின் ஐந்து முகங்களில் ஒன்றான தத்புருஷத்தில் இருந்து ஜோதியாக வெளிப்பட்டவர் பைரவர். காவல் தெய்வமாக வணங்கப்படுகிறார். சிவனைப் போன்றே படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலையும் செய்து வருகிறார். அனைத்து சிவாலயங்களிலும் வடகிழக்கு திசையில் இவருக்குத் தனியாக கோவில் இருக்கும். திரிசூலத்தைக் கையில் ஏந்தி நாய் வாகனத்துடன் காணப்படுவார்.

இறைவனைப் பல வடிவங்களாகக் கூறுவது போன்று, பைரவரையும் பல வடிவங்களாகக் கூறுவது மரபு. சிவபெருமானின் ஆற்றலுக்கு வடிவம் கொடுத்து அதனை அறுபத்து நான்கு வடிவங்களாகக் கூறியது போன்று காவல் தெய்வமான பைரவர் எட்டு வடிவங்களைக் கொண்டு அஷ்ட பைரவராகத் தோன்றுகிறார்.

| | |
|---|---|
| 1.சிதாங்க பைரவர் | 5.உன்மத்த பைரவர் |
| 2.ரூரு பைரவர் | 6.காபால பைரவர் |
| 3.சண்ட பைரவர் | 7.பீடண பைரவர் |
| 4.குரோத பைரவர் | 8.சங்கார பைரவர் |

சிவபராக்கியம் எனும் நூல் சில மாற்றத்துடன் அஷ்ட பைரவர் எனும் எட்டு பைரவர்களைக் குறிப்பிடுகிறது.

| | |
|---|---|
| 1. கால பைரவர் | 5.ஸம்ஹார பைரவர் |
| 2. கல்பாந்த பைரவர் | 6.உந்மத்த பைரவர் |
| 3. கரோதந பைரவர் | 7.சண்ட பைரவர் |
| 4. காபால பைரவர் | 8.உக்ர பைரவர் |



இவ்வெட்டு பைரவர்களும் எட்டெட்டு பைரவர்களாகப் பிரிந்து (8 x 8 = 64) அறுபத்து நான்கு பைரவ வடிவங்களாகத் தோன்றியுள்ளனர்.

நீலமேனி வண்ணம் கொண்டு, சிலம்புகள் அணிந்த திருவடியுடன் பாம்புகள் பொருந்தியத் திருவரையும், மண்டை ஓட்டு மாலைகள் புரளும், திருமார்பும், சூலம், பாசம், உடுக்கை, மழு முதலியன தாங்கிய திருக்கரங்களை உடையவராய் கூறப்பட்டாலும், அஷ்ட பைரவர் உருவங்கள் வண்ணம், வாகனம், கொண்டுள்ள ஆயுதம் இவற்றின் அடிப்படையில் மாறுபடும். அன்னம், ரிஷபம், மயில், கருடன், குதிரை, யானை, சிம்மம், நாய் ஆகியவை அஷ்ட பைரவரின் வாகனங்கள் ஆகும்.

பைரவருக்குரிய வழிபாட்டு நேரம் நள்ளிரவாகும். வழிபாட்டுக்கான தினம் தேய்பிறை அஷ்டமி தினமாகும். ஞானிகளின் அறிவை வளர்ப்பதில் ஞானபைரவராகவும், யோகிகளுக்குக் காவலாக இருப்பதால் யோக பைரவராகவும், வீரர்களிடம் உக்கிர பைரவராகவும், பஞ்சபூதங்களின் எழுச்சியிலிருந்து காப்பதால் பூத பைரவராகவும், காலம், இடம் என்ற தத்துவத்தின்படி உலகை இயங்கச் செய்வதால் கால பைரவராகவும் பலநிலைகளில் பைரவரை இறையாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

## 3. வேதாரண்யம்

நாகப்பட்டினம் மாவட்டத்தின் ஒரு சிறப்புப் பெற்ற நகரமாகவும், வட்டாரத் தலைநகராகவும் விளங்கும் இவ்வூர், நிலவளமும், நீர்வளமும் நிறைந்து, முல்லையும், நெய்தல் தன்மையும் உடையது. இவ்வூர் சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று. நான்கு மறைகளும்(வேதம்) ஈசனை வழிப்பட்ட காடு என்ற வகையில் இது மறைக்காடு எனப் பெயர் பெற்று விளங்குகிறது. இதனை சம்பந்தப் பெருமான்

"சதுரம் மறைதான் துதி செய்து வணங்கும்

மதுரம் பொழில்சூழ் மறைக்காடு" என்று குறிப்பிடுகிறார்.

முன்பு மரைக்காடு என்று வழங்கப்பெற்றப் பெயர் பின்பு மறைக்காடு என மருவியதாகக் கூறுவர். ஒருகாலத்தில் மான்கள் (மரைகள்) அதிக எண்ணிக்கையில் இங்கு இருந்ததால் மரைகள் இருந்தக் காடு மரைக்காடு எனப் பெயர் பெற்று பின்னர் திருக்கோயிலும் அது தொடர்பான புராண வழக்குகளும் எழுந்த பின்னர் மறைக்காடு என்றும், மறைவனம் என்றும், வேதவனம் என்றும், திருமறைக்காடு என்றும் பின்னர் வேதாரணியம் என்றும் பெயர் பெற்றுள்ளது.

சோழர் காலத்தில் வேதாரணியம் பகுதி உம்பள நாடு என்றும், குன்றூர் நாடு என்றும் அழைக்கப்பெற்றுள்ளது. இங்கு கோயில் கொண்டுள்ள இறைவன் திருமறைக்காடர் ஆவார். இவர் லிங்கத்திருமேனி கொண்டு விளங்குகிறார். இவருக்கு பின்னே சிவன் திருமணக் கோலத்தில் மறைக்காட்டுறை மணாளனாகவும், இறைவி யாழைப் பழித்தன்ன மொழி உமையம்மையாகக் காட்சி தருகிறார். அம்மையப்பராக மணக்கோலத்தில் அகத்தியருக்குக் காட்சியளிக்கிறார். இவ்விறைவனை நான்முகன், திருமால், இந்திரன், இராமன் போன்றோர் வழிபட்டமையும், அகத்தியர், புலத்தியர், வசிட்டர், விசுவாமித்ரர், நசிகேது, சுவாதகேது, கசிப்தும்புரு போன்ற ஞானியர் பலரும், மனு, மாந்தர், தசரதர், பஞ்ச பாண்டவர், மகாபலிச் சக்கரவர்த்தி, முசுகுந்தன் போன்றோரும் இங்கு உறையும் இறைவனை வழிபட்டுள்ளனர்.

இங்கு இறைவனின் விளக்கைத் தூண்டிய எலி பிறகு மகாபலிச் சக்ரவர்த்தியாகப் பிறப்பெய்தியது புராணச் செய்தி. தேவார மூவர்களான திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகியோர்களால் பாடல் பெற்ற திருத்தலம்.

வேதாரணியம் அகஸ்த்தியாம்பள்ளி கோடியக்கரை என்ற இந்த பாடல்பெற்ற பகுதிகளில் வேதாரணியத்திலிருந்து மேற்கே 15 கி.மீ. தொலைவில் முள்ளியாற்றை ஒட்டிய மணற்பாங்கான ஊராக தகடூர் அமைந்துள்ளது. தண்ணீர் தேங்கி நிற்கும் பகுதியை தமிழில் புலம் என்பர். அவற்றின் வழியே ஆயக்காரன்புலம், பஞ்சநதிக்குளம் ஆகிய ஊர்கள் பெயர் பெற்றுள்ளன.

கடலின் வாய்ப்பகுதியில் அமைந்த மேட்டுநிலம் வாய்மேடு என்று பெயர் பெற்றுள்ளது. தெற்கே அமைந்ததால் தென்னடார் என்றும், இதன் வடக்கே அமைந்துள்ளது தாணிக்கோட்டகம் ஆகும். நீர் நிறைந்திருக்கும் தாழ்வான விவசாயப் பகுதியைக் கோட்டகம் என்பர் அதனடிப்படையில் இவ்வூர் தாணிக்கோட்டகம் எனப் பெயர் பெற்றுள்ளது.

பெரும்புயலும் அதையொட்டியப் பெரும் மழைக்கும் சேரும் மழைநீர் இங்கு நிலப்பகுதியை மூழ்கடித்துவிடுகிறது. வளவனாறு, முள்ளியாறு, மானாங்கொண்டான் ஆறு, உப்பனாறு என்ற முக்கியமான ஆறுகள் நீர் ஆதாரமாகவும், வடிகாலாகவும் பயன்படுகிறது. தகட்டூரில் வேதாரணியம் திருக்கோயிலுக்கு சொந்தமான 35 ஏக்கர் 80 செண்ட் நிலம் உள்ளதாக அறிய முடிகிறது.

**தகட்டூர் :**

நாகப்பட்டினம் மாவட்டத்தில் வேதாரணியம் வட்டத்தில், வேதாரணியம் திருத்துறைப்பூண்டிப் பேருந்துத் தடத்தில் தகட்டூர் அமைந்துள்ளது. இது கடல் மட்டத்திலிருந்து 6 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ளது.

**தகட்டூர் பெயர் காரணம் :**

தகடு + ஊர் என்பது தகட்டூர் என்ற பெயர் பெற்றதாகச் சொல்லப்படுகிறது. தகட்டினை உடைய ஊர் என்று இதனை எடுத்துக் கொள்ளலாம். இப்பெயர் யந்த்ரபுரி என்ற வடமொழிப் பெயருக்கான தமிழ்வடிவம் ஆகும். தகடு என்ற தமிழ் சொல்லுக்கு நிகராக யந்திரம் என்ற வடமொழிச் சொல்லும், ஊர் என்ற தமிழ்சொல்லுக்கு நிகராக புரி என்ற வடமொழிச் சொல்லும் இங்கு இணைத்துப் பார்க்க வேண்டிய ஒன்றாகும். தகட்டூர் அருள்மிகு பைரவநாதர் திருக்கோயில் மகாமண்டபத்தில் அமைந்துள்ள பீடத்தில் “பஞ்சாட்சர யந்த்ரம்” நிர்மாணிக்கப்பட்டுள்ளது. அதனால் இத்தலம் வடமொழியில் யந்த்ரபுரி என்றும், தமிழில் தகட்டூர் என்றும் பெயர் பெற்றது. எனவே பைரவநாதர் திருக்கோயில் வழி இவ்வூர் தகட்டூர் என்று பெயர் பெறுகிறது.

**யந்திரம் தகடு :**

இறைவன் உறையும் திருக்கோயில்களில் இந்த பிரபந்த சக்தியையும், இறைசக்தியையும் கணக்கிட்டு அவற்றினை உலோகத் தகட்டில் கோடுகளாக வரைந்து அதில் மந்திர சக்திகளை அடக்கி, தினமும் பூஜிக்கப்படுவது நடைமுறையாகும். அவ்வாறு வழிபடப்படும் அந்த யந்திரத்தின் சக்தி வலிமையடைந்து அந்தப் பகுதியைக் காக்கும் என்பது நம்பிக்கை.

யந்திரம் என்பது மந்திர சக்தியை நிலை நிறுத்தி அதனை இயங்கச் செய்யும் கருவியாகும். யந்திரத்தில் கீறப்படும் கோடுகளின் வழி இறைவன் வடிவை அறியலாம். இயந்திரம் இறை வணக்கத்தை உருவநிலையிலிருந்து உருவமற்ற நிலைக்கு அழைத்துச் செல்கிறது. யந்திரங்கள் அதில் கீறப்படும் கோடுகளின் வழி இறைவன் திருவுருவத்தை நினைவூட்டுவது அதனாலேயே அந்த இயந்திரங்கள் இறைவனாகவே போற்றப்படுகிறது. யந்திரத்தின் உதவியில்லாமல் மந்திரங்கள் பயனளிப்பதில்லை.பைரவநாதரின் வடிவமாக பைரவ யந்திரம் இத்திருக்கோயில் மகாமண்டபத்தில் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. யந்திரம் என்பது சக்கரம் என்றும் அழைக்கப்படுவதுண்டு.



**தகட்டூர் வைப்புத்தலம் :**

இறைவன் சிவபெருமான் உறையும் திருக்கோயில்கள் தோறும் சென்று இறைவனைப் பாடி வழிபட்ட சமயக்குரவர்கள், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் ஆவர். இவர்கள் பாடிய பாடல்கள் தேவாரம் என்றும், திருவாசகம் என்றும் அழைக்கப்படுகிறது. அவ்வாறு அவர்கள் நேரடியாக சென்று வழிபட்டுப் பாடல்பாடிய தலங்கள், தேவாரத் தலங்கள் என்று அழைக்கப்படுகிறது. இதற்கு உதாரணமாக விளங்குவது வேதாரணியம், திருக்கடிக்குளம் என்ற கற்பகநாதர் குளம், இடும்பாவனம், கோவிலூர் போன்ற ஊர்களில் இருக்கும் சிவன்கோயில்கள் ஆகும்.

இந்த தேவாரத்தலங்களுக்கு அடுத்தநிலையில் வைத்துப் போற்றப்படுவது வைப்புத்தலங்கள் ஆகும். மேலே குறிப்பிட்ட சமயக்குரவர்கள் வைப்புத்தலங்களுக்கு நேரடியாகச் செல்லாமல் அந்ததலத்தையும் அதில் உறையும் இறைவனையும் மனதில் கொண்டு அவ்விறைவன் மீது பக்திப் பாடல்களைப் பாடினர்.

அவ்வாறு பாடிய பாடல்களில் இடம் பெறும் திருக்கோயில்கள் வைப்புத் தலங்களாகும். இவ்வாறு பாடிய பாடல்கள் தேவாரப்பதிகங்களில் தனிப்பதிகத்தில் இடம்பெறாது. வேற்றூர் பதிகத்தின் இடையிலும் பொதுவான தேவாரப்பதிகத்தில் இடையிலும் தலப்பெயர் வரும் தலங்கள் ஆகும். அவ்வாறு தேவாரப்பதிகத்தின் ஏழாம் திருமுறையில் இடம்பெறும் சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய திருநாட்டுத் தொகை என்ற பாடல் தொகுப்பில் தகட்டூர் தலம் இடம்பெற்றுள்ளது.

**“ வீழக் காலனைக் கால்கொடு**
**பாய்ந்த விலங்கலான்**
**கூழை ஏறுகள் தான் இடங்**
**கொண்டது கோவலூர்**
**தாழையூர் தகட்டூர்தக்க**
**ளூர் தருமபுரம்**
**வாழைகாய்க்கும் வளர் மருக**

கன்னாட்டு மருகலே” இவ்வாறு இடம்பெறும் இப்பாடல், கூற்றுவனாகிய யமனை, அவர் உயிரற்று விழுமாறு காலால்

எட்டி உதைத்த கயிலாயத்தை இடமாகக் கொண்ட சிவன், நடைநிரம்பாத எருதினை(காளை) ஏறுதலை விரும்பக் கூடிய அந்த இறைவன் தனக்கு இடமாகக் கொண்ட ஊர்கள் திருக்கோவலூர், தாழையூர், தகட்டூர், தக்களூர், தருமபுரம், வாழைகள் காய்க்கின்ற செல்வம் வளர்கின்ற மருகல் நாட்டில் உள்ள மருகல் ஆகியவை ஆகும் என்ற பொருளைக் கொண்டுள்ளது.

இந்தப்பாடல்கள் வழி தகட்டூர் என்ற தலத்தின் தொன்மையும், 1300 ஆண்டுகளுக்கு மேற்பட்ட தொடர்ச்சியும் இறைவன் சிவபெருமானுக்கு உரிய தலமாகவும் இத்தலம் விளங்குவதை உணரமுடிகிறது. தகட்டூர்பைரவர் திருக்கோயிலையொட்டிய பகுதி லிங்கத்தடி என்று அழைக்கப்படுவதையும் தகட்டூரில் வேறு சில பகுதிகள் லிங்கத்தடி என்று அழைக்கப்படுவதையும், தகட்டூர் செட்டியக்காடு பகுதியில் புராதண திருக்கோயில் இருந்து வழிபாட்டு மரபில் விடுபட்ட நிலையில் அவ்விடம் தேரடிக்குளம் என்று அழைக்கப்படுவதும் தகளபுரீஸ்வரரின் லிங்கத்திருமேனி பைரவர் ஆலயத்தில் இடம்பெறுவதும் தகட்டூர் ஒரு வலுவான சைவநெறிக்கு உரிய இடமாகக் கருத முடிகிறது.

மேலும் இவ்வூரில் திருக்கோயில் கொண்டுள்ள மாப்பிள்ளை வீரன் இப்பகுதி மக்களின் வேண்டுதலை நிறைவேற்றி அருள்புரிபவர். தஞ்சை மாவட்ட விபர நூல் (Tanjore Gazetteer) எழுதிய ஹமிங்வே என்ற ஆங்கிலேயர் இந்த மாப்பிள்ளை வீரன் திருக்கோயில் பற்றி தனது தஞ்சைமாவட்ட விவர நூலில் குறிப்பிடுகிறார். அன்றைய நாளில் அதிக அளவு மக்கள் கூடும் திருவிழாவாக மாப்பிள்ளை வீரன் கோயில் திருவிழா விளங்கியதாகவும் சுமார் ஏழாயிரம் பேருக்கு மேல் மக்கள் இந்த கோயில் திருவிழாவில் பங்கேற்றதாகக் குறிப்பிடுகிறார்.



## 4. இராமாயணத் தொடர்பு

தகட்டூரில் அருள்மிகு பைரவர் திருக்கோயில் கொண்டது பற்றிய ஒரு புராணக் கதையொன்று இராமாயணத்தைத் தொடர்புபடுத்தி வழங்கி வருகிறது. இராவணனோடு போர்முடித்த ராமன் இராவணனைக் கொன்ற பாவத்தினைப் போக்கிட சிவபூஜை செய்ய எண்ணுகிறார். அதற்காக அனுமனிடம் சிவலிங்கம் ஒன்றை கோருகிறார். உடனே ஆஞ்சநேயர் சிவலிங்கம் கொண்டுவர காசி நகர் செல்கிறார். காசியிலிருந்து சிவலிங்கத்தோடு திரும்பும் அனுமன் காசியின் காவல் தெய்வமான பைரவரும் அனுமன் எடுத்துவரும் சிவலிங்கத்;தோடு உடன் வருகிறார்.

அனுமன் திரும்பி வரும் வழியில் தகட்டூரில் கொஞ்சம் ஓய்வெடுக்கிறார். அச்சமயம் காசியிலிருந்து கொண்டு வந்த லிங்கமும் அதன் காவல் தெய்வமான பைரவரும் தகட்டூரில் தங்கியிருக்கிறார்கள். பின்னர் இதுவே பைரவர் திருக்கோயில் கொண்டு வழிபாட்டுக்குக் காரணமாகிறது. இதேபோன்று ஓர் புராணச் செய்தி ஆந்திராவில் உள்ள வாலிஸ்வரன்பேட்டை பைரவர் மீதும் சொல்லப்படுகிறது.

இராமாயணம் மற்றும் மகாபாரதம் தொடர்புடைய பல்வேறு திருக்கோயில்கள் மற்றும் அதனையொட்டிய பகுதிகள், தகட்டூர் தலத்தைச் சூழ்ந்துள்ளது என்பது கருத்தில் கொள்ள வேண்டிய ஒன்று. இதுதொடர்பான தகவல்களை அந்தந்த திருக்கோயில்களின் தலபுராணங்களும், கோயில் தொடர்புடைய செய்திகளும் தெரிவிக்கின்றன.

இராவணனோடு போரிடுவதற்கு முன்பு இராமர் கோடியக் கரையில் நின்று இலங்கையைப் பார்த்ததாகவும், அப்போது அங்கு இராவணனின் அரண்மனையின் பின்பகுதி தெரிந்ததாகவும், பின் பகுதிவழிச் செல்ல வேண்டாம் என்று இராவணன் அரண்மனையின் முன்பகுதி தெரியும் இராமேஸ்வரத்திலிருந்து இலங்கைக்குப் பாலம் அமைத்துச் சென்றதாகவும் கூறப்படுகிறது. அவ்வாறு கோடியக்கரையில் இராமர் நின்று இலங்கையைப் பார்த்த பகுதியில் இன்று இராமர் பாதம் அமைந்துள்ளதாகக் கூறுகின்றனர். இலங்கைக்குச் செல்வதற்கு முன்பு இராமர் இத்தலத்து இறைவன் அமிர்தகடேஸ்வரரை வணங்கிச் சென்றார் என்றும் கூறப்படுகிறது.

இராவணனை கொன்றதால் ஏற்பட்ட பிரமகத்திதோஷத்தை நீக்கிட இராமர் வேதாரணியம் வந்து திருமறைக்காட்டீசனை வணங்கி தவமிருந்ததால் திருமறைக்காட்டீஸ்வரர் திருக்கோயிலில் அருள்பாலிக்கும் விநாயகப் பெருமான் தன் காலைத் தூக்கி வீரகத்தியை (பாவத்தை) விரட்டினார். இதனால் இங்குள்ள விநாயகருக்கு வீரகத்தி விநாயகர் என்று பெயர் ஏற்பட்டது. இத்திருக்கோயிலில் இராமர் பூசித்த இலிங்கத் திருமேனியான இராமநாதசுவாமிக்கு ஆலயத்தின் வடகிழக்கே சிறு சன்னதி அமைக்கப்பட்டுள்ளது.

வேதாரணியத்தில் உள்ள 96 தீர்த்தங்களில், பைரவ தீர்த்தம் என்பதுடன், இராம தீர்த்தம், இலக்குமண தீர்த்தம், சீதா தீர்த்தம், என்றத் தீர்த்தங்கள் குறிப்பிடப்படுகின்றன. இராமரின் வேண்டுதலுக்காக இக்கோயிலில் உள்ள மணிகர்ணிகை தீர்த்தம் உச்சிப்பொழுதில் தோன்றியதாகக் கூறுவர்.

இராமர் இலங்கைக்கு படை எடுத்துச் செல்லும் முன்பு திருக்கடிக்குளம் என்ற கற்பகநாதர் குளத்து இறைவன் கற்பகநாதரையும், திருவிடும்பாவனம் என்ற இடும்பாவனத்து இறைவன் சத்குணநாதரையும் வணங்கிச் சென்றதாக அந்தந்த திருக்கோயில் தொடர்புடைய செய்திகளில் காணமுடிகிறது.

திருவுசாத்தனம் என்ற கோயிலூர் (முத்துப்பேட்டைக்கு அருகில்) இறைவன் மந்திரபுரீஸ்வரரின் ஆலோசனை பெற்றே இராமர் இலங்கைக்கு செல்ல இராமேஸ்வரத்திலிருந்து பாலம் கட்டினார் என்பதைத் தலபுராணம் தெரிவிக்கிறது. இராமர், இலட்சுமணன், ஜாம்பவான், சுக்ரீவன், அனுமன் ஆகியோர்



இங்குள்ள இறைவன் மந்திரபுரீஸ்வரரை வழிபட்டதாகவும் கூறுவர்.

அத்துடன் இக்கோயிலுக்கு அருகில் உள்ள ஜாம்பவன் ஓடை, கழுவன் காடு, அனுமன்காடு போன்ற ஊர்கள் இராமாயணம் தொடர்புடையதாகச் சொல்கின்றனர். மற்றும் சீதையைத் தேடி இராமன் வரும்போது உதயமார்தாண்டபுரத்தில் தங்கி, சூரிய உதயத்திற்குப் பின்னர் புறப்பட்டுச் சென்றதால் அவ்வூர் உதயமார்த்தாண்டபுரம் என்ற பெயர் ஏற்பட்டதாகவும் கூறுவர். சீதையை மீட்க இராவணனோடு போரிட்டு ஜடாயு என்ற கழுகு வீழ்ந்த இடம் கெழுவத்தூர் என்றும், இராவணனைக் கொன்ற பாவம் நீங்க இராமர் வழிபட்ட இராமநாதர் ஆலயம் உள்ள ஊர் திருராமேஸ்வரம் என்றும், இராமரின் இளவல் இலட்சுமணன் பெயரால் ஏற்பட்ட ஊர் தம்பிக்கு நல்லான் கோட்டை என்ற தம்பிக் கோட்டை என்றும் சொல்லப்படுகிறது. இதுபோன்று இராமரோடும், இராமாயணத்தோடும் இப்பகுதியில் உள்ள திருக்கோயில்கள் தொடர்புடையதாக உள்ளதையும் அந்த வரிசையில் தகட்டூர் தலமும் இராமாயணம் தொடர்புடையதாக இருப்பதை இணைத்துப் பார்க்க வேண்டியுள்ளது.

தகட்டூர் தலத்தில் பைரவநாதசுவாமி என்ற பெயரில் பைரவரே மூலவராக எழுந்தருளியுள்ளார். இங்கு பைரவர் முதன்மைத் தெய்வமாக தனிக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார். கோயில் கருவறைக் கருங்கல் கட்டுமானத்தைக் கொண்டு அமைந்துள்ளது.

பிரகாரத்தில் விநாயகர், காசிவிஸ்வநாதர், தகளபுரீஸ்வரர், முருகன், ஆஞ்சநேயர், துர்க்கை, சண்டிகேஷ்வரர் எழுந்தருளியுள்ளனர். சுந்தரமூர்த்தி நாயனார் தமது திருநாட்டு தொகையில் தகட்டூரை(வைப்புத்தலமாக) குறிப்பிடுகிறார். மூலவராக எழுந்தருளியுள்ள பைரவருக்கே உற்சவம் முதலிய அனைத்து வழிபாடுகளும் நடைபெறுகிறது. தேய்பிறை அஷ்டமியில் சிறப்பு வழிபாடும், சித்ரா பவுர்ணமியில் 10 நாள் விழாவும் சிறப்பாக இக்கோயிலில் கொண்டாடப்படுகிறது. இங்கு உற்சவர், சட்டைநாதர் என்ற பெயரோடு உற்சவமூர்த்தியாக வழிபடப்படுகிறார்.

**மூலவர் தோற்றம் :**

மூலவராக வீற்றிருக்கும் பைரவர் கைகளில் சூலம், கபாலம்,

கயிறு, உடுக்கை ஏந்தி பாம்பினால் மேனியை அலங்கரித்து நிர்வாணக் கோலத்தில் நாய் வாகனத்துடன் அருள்பாலிக்கிறார்.

கோயில் கிழக்கு நோக்கியும், மூலவர் அருள்மிகு பைரவநாதர் 3.5 அடி உயரமுடைய கருங்கல் விக்ரகமாக உள்ளார். உற்சவர் பஞ்சலோகத்தால் உருவாக்கப்பட்ட அருள்மிகு சட்டைநாதர் ஆவார். கற்பகக்கிரகத்துப் பைரவரே மூலவராக வீற்றிருக்கிறார். இங்கு தினம் நான்கு முறை பூஜைகள் நடைபெறுகிறது.

1970களில் இத்திருக்கோயிலுக்கு சொந்தமாக சுமார் மூவாயிரம் ரூபாய் மதிப்புள்ள தங்கம், வெள்ளி ஆபரணங்களும், வருடத்திற்கு ரூபாய் 10000 வருவாய் வரக்கூடிய 252.62 ஏக்கர் அளவிற்கு நஞ்சை, புஞ்சை நிலங்களும், வருடத்திற்கு ரூபாய் 100 உண்டியல் வருமானமும், அர்ச்சனை, அபிஷேகம், கட்டளைகள் மூலம் வருடத்திற்கு ரூபாய் 400இம் வருமானமாக வரப்பெற்றதாக 1961 ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் கோயில்கள் பற்றிய விபரத்தில் கூறப்பட்டுள்ளது.



## 5. தகட்டூரில் பைரவர் வழிபாட்டின் வளர்ச்சி

தகட்டூரில் அருள்மிகு பைரவநாதர் திருக்கோயில் தோற்றம் பற்றி புராண வழக்காக இராமாயணத்தோடு தொடர்புப்படுத்தி காசியிலிருந்து பைரவர் இங்கு வந்து திருக்கோயில் கொண்டதாகச் சொல்லப்பட்ட தகவல் முன்பக்கத்தில் விளக்கப்பட்டது. தகட்டூர் அருள்மிகு பைரவநாதர் திருக்கோயில் தோற்றம் பற்றிக் கல்வெட்டு அல்லது இலக்கியம் போன்ற ஆவணச் சான்றுகள் ஏதும் இல்லாத நிலையில் வாய்மொழி மற்றும் செவி வழிச் செய்திகளை ஆதாரமாக எடுத்துக் கொள்ள வேண்டியுள்ளது. அதனடிப்படையில் பைரவரை மூலவராகக் கொண்டு இத்திருக்கோயில் எவ்வாறு தோற்றம் பெற்றது. இக்கோயிலைப் பெருவாரியான மக்கள் குலத் தெய்வமாக எப்படி வழிபடுகின்றனர் என்பதற்கு விடை காண வேண்டியுள்ளது. சிறு தெய்வ மரபில் உள்ள தெய்வங்களே பெரும்பான்மையாக குலத் தெய்வமாக உள்ள நிலையில், பெருந்தெய்வ வழிபாட்டு மரபில் உள்ள அருள்மிகு பைரவர் இங்கு குலத் தெய்வமாக வழிபடப்படுவதும் கவனிக்கத்தக்கது.

இந்த தகட்டூர் ஸ்தலம் என்பது ஒரு அடக்கஸ்தலம் அல்லது சமாதித் தெய்வம் வழிபாடு நடைபெற்ற ஸ்தலம் என்பதோடு தொடர்புடையதாகத் தெரிகிறது. இந்த அடக்க ஸ்தலத்தில் பைரவருக்கான திருக்கோயில் எடுக்கப்பட்டுள்ளதா அல்லது இணைக்கப்பட்டுள்ளதா என்பது ஆய்வுக்குரியது. அவ்வாறு இங்கு அடக்கம் செய்யப்பட்டவர் யார்? எதனடிப்படையில் இங்கு கோயில் எழுப்பப்பட்டுள்ளது என்று பார்ப்பதற்கு முன் சைவ சமயத்தில் சமாதித் தெய்வ வழிபாடு என்ற மரபு

தொடர்ந்து பின்பற்றப்படும் வழிபாட்டு முறை ஆகும்.

தகட்டூரில் அருள்மிகு பைரவநாதர் திருக்கோயில் தோற்றம் பற்றித் தங்கள் முன்னோர் காலத்தில் இக்கோயிலை நிர்மாணித்து குடமுழுக்கு உள்ளிட்டவற்றை மேற்கொண்ட வகையில் இந்தத் தகட்டூர் திருக்கோயிலோடு தொடர்புடைய முன்னாள் ஊராட்சி மன்றத் தலைவர்திரு.எம்.எஸ்.அமிர்தகடேஸ்வரன் அவர்கள் சில தகவல்களைத் தருகிறார்.

இவருடைய முப்பாட்டனார் திரு.சடையப்ப சுவாமிகள் மற்றும் திரு.மாணிக்க சுவாமிகள் என்ற இருவரால் இந்தக் கோயில் பல ஆண்டுகளுக்கு முன் நிர்மாணிக்கப்பட்டு பின் இவரின் சகோதரர் திரு.எம்.எல்.சம்பந்தன் நிர்வாக தர்மகர்த்தாவாக இருந்து 27.04.1966இலும் பின்பு 27.08.2000இலும் கும்பாபிஷேகம் நடைபெற்றச் செய்தி கல்வெட்டுகளாக இத்திருக்கோயிலில் உள்ளது.

திரு.எஸ்.அமிர்தகடேஸ்வரன் அவர்கள் கொடுத்த தகவல்களை அடிப்படையாகக் கொண்டு இந்த கோயில் தோற்றத்தினை கீழ்க்கண்டவாறு ஏற்பட்டதாக முடிவுக்கு வரலாம்.

சைவ சமயம் சார்ந்த யோகிகள், பெரியவர்கள், தவ வாழ்வு மேற்கொண்டவர்கள் மேலும் சித்தத்தை சிவன்பால் வைத்தவர்கள், முக்தியடைந்து சிவனடி சேர்ந்த பின்னர் அவர்களின் பூதவுடலை எரியூட்டாமல் சமாதி அமைத்து அச்சமாதியில் லிங்கம் பிரதிட்டை மேற்கொள்வது பற்றிச் “சமாதிலிங்கப்பிரதிட்டை விளக்கம்” என்ற சுவடி விரிவாக விளக்குகிறது.

சிவனடி சேர்ந்தவர் பூத உடலை பால், தயிர், பஞ்சாமிர்தம் முதலானவற்றால் முழுக்காட்டித் தூய்மையான இடத்தில் சமாதி வைத்துக் கட்டிடம் எழுப்பி அதன்மேல் பீடம் அமைக்க வேண்டும் என்றும், சமாதி பீடத்தின் மீது லிங்கம் அமைத்து அதனைச் சிவமாகக் கருதி வழிபடல் வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. இவ்வாறு செய்யாமல் சிவனடி சேர்ந்தவர் பூதவுடலை தீ மூட்டினால் அந்நாட்டு அரசனுக்குக் கேடும், நாட்டில் பஞ்சமும், நோயும் வருவதோடு அந்நாட்டிற்கு அழிவும் ஏற்படும்.

சமாதி வைப்பதன் மூலம் நாடு செழிக்கும். அரசன் இந்திரன் போல் வாழ்வான். மாதம் மூன்று முறை மழை பொழியும். சிவனடி சார்ந்த ஞானிகள் தங்கள் உடலை தாங்களே ஞானவெந்தீயினிலிட்டதனால் அவ்வுடலை மீண்டும் தீயினால் சுடாது சமாதி வைத்து வழிபட வேண்டும் என்று மேலே குறிப்பிட்ட நூலில் விளக்கப்பட்டுள்ளது. இவ்வாறு அமைக்கப்பட்ட சமாதித்தலம் காசியை விட மிகச் சிறந்தது என்றும், இந்த சமாதித் தலத்தில் எவ்வித ஏற்றத்தாழ்விற்கும் இடமில்லை என்றும், இது எல்லாத் தலங்களுக்கும் மேலானது என்றும் ஆகமங்கள் கூறுவதாகக் குறிப்பிடுகின்றனர்.

சமாதி லிங்கம் பிரதிட்டை மேற்கொள்வது சைவ சமயத்தாரில் ஒரு சாரர் பின்பற்றும் செயலாகும். குறிப்பாகத் தீட்ஷை பெற்றவர்கள் துறவிகள் முதலானோரைச் சமாதி வைக்கின்றனர்.

நல்ல சிவஞானத்தாலும், சிவயோகத்தாலும், சிவதரும நெறியாலும், மேலான தவத்தாலும், புலனடக்கமுடைமையாலும், எல்லையற்ற அன்பாலும் இல்லறத்தினை துறந்ததாலும் சிறந்து விளங்கி வீடு பேற்றினை அடைந்த சிவஞானியர் உடல் சமாதியாக அமைக்கப்பெற்று மக்களின் வழிபாட்டுக்கு உரிய திருக்கோயிலாக வளர்ச்சியடைவது காலந்தோறும் இருந்து வந்திருக்கிறது.

அவ்வாறான ஒரு சிவயோகி பைரவ வழிபாட்டில் ஈடுபட்டு பைரவ யோகியாய் சித்தராய் மக்களின் அன்பினையும் பேராதரவையும் பெற்றுத் தகட்டூரில் செல்வாக்குடன் இருந்திருக்கிறார். அவர் முக்தியடைந்து சிவனடி சேர்ந்தபின் அவருக்கு உரிய வழியில் சமாதி அமைக்கப்பட்டு சமாதியின் மீது லிங்கம் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது என்றவாறு முடிவு செய்யலாம்.

இவ்வாறு சிவனடி சோர்ந்தோர் பூத உடல் சிவன்கோயில் மதிற்சுவருக்கு உள்ளேயும், மேலான ஞானிகள் வசிக்கின்ற மடத்திலும், சிறந்த பூங்காவிலும், குளம், ஆறு இவைகளின் கரையிலும், பூஞ்சோலையிலும், நல்ல காட்டுப் பகுதியிலும் பெருஞ்சோலை ஓரங்களிலும், பொன் போன்ற சிகரங்களுடைய மலையடிவாரத்திலும் அமைத்தல் வேண்டும் என்பதற்கிணங்க தகட்டூர் திருக்கோயிலில் அடக்கம் செய்யப்பட்டிருக்கலாம். இவ்வாறு ஏற்பட்ட சமாதி ஸ்தலம், சமாதியடைந்த சித்தரின் அற்புதச் செயலாலும், அவரை பின்பற்றிய மக்களின் ஆதரவாலும்

பெருவளர்ச்சியுற்று வழிபாட்டுக்குரிய திருக்கோயிலாக மலர்ச்சியடைந்திருக்கிறது எனலாம்.

முன்னோர் வழிபாடே குலத்தெய்வ வழிபாடாக பரிணாம வளர்ச்சியடைகையில் சமாதியடைந்த சித்தர், குலத்தெய்வமாக வணங்குபவர்களின் முன்னோராய் இருந்து அவர்களுக்கு அருள் வழங்கி வருவதால் ஏற்றம் பெருகிறது. கோயிலுடன் சேர்த்தோ, தனியாகவோ சமாதிக் கோயில் எழுப்பலாம் என்று "காமிக ஆகமம்" என்ற நூல் குறிப்பிடுவதாகவும், சமாதியை கோயிலில் வைக்கும் போது கருவறையில் அல்லது திருச்சுற்றில் வைக்கலாம் என்று ரௌரவ ஆகமம் கூறுவதாகவும் சரித்திரச் செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி தனது "நடுகற்கள்" என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

மேலும் அவர் விழுப்புரம் மாவட்டம் திருவெண்ணெய் நல்லூர் சிவன் கோயிலில் மெய் கண்டார் சமாதிக் கோயிலும், சிதம்பரம் திருக்களாஞ் செடியுடைய மகாதேவர் கோயிலில் மறைஞான சம்பந்தர் சமாதிக் கோயிலும், திருவெற்றியூர் கடற்கரை ஓரமாக பட்டினத்தாருக்கும், திருவான்மீயூரில் பாம்பன் சுவாமிகளுக்கும் சமாதிக் கோயில்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன என்று பதிவு செய்கிறார். அத்துடன் திருமந்திரம், திருவடிஞானம் பெற்ற சிவஞானி இறந்தால் அவரை எரிக்காமல் புதைத்து அரசமரமோ, சிவலிங்கமோ வைக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார். சிவசேத்திரம் வந்து உயிர் விடும் அன்பர்களுக்குப் பாணலிங்கம் எடுக்கப்படுவதையும் குறிப்பிடுகிறார்.

நாகை மாவட்டத்தில் அழுகினி சித்தர் நாகையிலும், கோரக்கர் பொய்கை நல்லூரிலும், தன்வந்திரி வைத்தீஸ்வரன் கோயிலிலும், திருமூலர் திருவாவடுதுறையிலும், குதம்பையார் மயிலாடுதுறையிலும், பாம்பாட்டிச் சித்தர் திருக்கடையூரிலும், வால்மீகியார் எட்டுக்குடியிலும், பாப்பையா சித்தர் பொறையாரிலும் சமாதியடைந்துள்ளனர். ஒவ்வொரு இடத்திலும் உள்ள கோவில்களில் அவர்களுக்கென்று தனி மண்டபம், தனிச்சன்னதி உள்ளது. ஓம் ஸ்ரீ சீர்காழி சிற்றம்பலநாடிகள் உள்ளிட்ட 64 பேருக்கு மயிலாடுதுறைக்கு அருகில் சித்தர்காட்டில் ஜீவ சமாதி அமைந்துள்ளது.

நாகப்பட்டினம் அருள்மிகு காயாரோகணஸ்வரர் நீலாயதாட்சி திருக்கோயிலில், இராமதேவர் என்ற சித்தர் சன்னதியும்



அதன்மீது பைரவ பீடம் அமைக்கப்பட்டு சிறப்புப் பூஜைகள் நடைபெறுவதையும், அத்தலம் பைரவ வழிபாட்டுக்கு உரிய முக்கியமான தலமாக விளங்குவதையும் இங்குக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

தகட்டூர் பைரவர் திருக்கோயிலையொட்டிய பகுதி லிங்கத்தடி என்று அழைக்கப்படுவதும், தகட்டூரின் வேறு சில பகுதிகள் லிங்கத்தடி என்று பெயர் தாங்கி இருப்பதும், புராதண சிவன் கோயில் செட்டியக் காடு பகுதியில் விளங்கி அதன் இறைவனாக தகளபுரீஸ்வரர் இருந்து பின்னர் வழிபாட்டு நிலையிலிருந்து அக்கோயில் மறைந்துவிட்டதையும், அதன் எச்சமாகத் தேரடிக் குளம் போன்ற பெயர்கள் இன்றும் இடம்பெறுவதையும், சுந்தரர் திருநாட்டுத் தொகையில் தகட்டூர் இறைவனைக் குறிப்பிடுவதும், தகட்டூர் தலத்தில் காசிக்கு சென்று காலபைரவர் மற்றும் வீசுவநாதரை வழிபட்டு திரும்பிய சித்தர் ஒருவர் அடக்கமாயிருக்கிறார் என்றும், காசியிலிருந்து வந்த சித்தர் ஒருவர் அடக்கமாயிருக்கிறார் என்றும் வேறு சில பெரியவர்கள் தகட்டூர் தலம் பற்றி குறிப்பிடுவதையும் கருத்தில் கொண்டு இதுவரை விளக்கப்பட்டவற்றிலிருந்து கீழ்க்கண்டவாறு முடிவினை எட்டலாம்.

1. இங்கு திருக்கோயில் இருந்து அதன் வளாகத்திலே சிவஞானியர் அல்லது சித்தர் சமாதி ஏற்படுத்தப்பட்டு அது திருக்கோயில் வழிபாட்டோடு கலந்திருக்கலாம்.

2. இத்திருக்கோயில் அடக்க ஸ்தலமாக இருந்து சமாதி தெய்வ வழிபாட்டில் வளர்ந்து கோயிலாக எழுச்சி பெற்றிருக்கலாம்.

3. சோழர் காலத்திலிருந்து பெரு வளர்ச்சி பெற்ற சைவ மடங்கள் அல்லது குகைகள் என்று அழைக்கப்பட்ட சைவ மத நிறுவனங்கள் இங்கு செயல்பட்டு அதன் தலைவர் அல்லது அதிலிருந்த சிவயோகி முக்தியடைந்து அவருக்கு சமாதி ஏற்படுத்தி அதன் மூலம் இங்கு திருக்கோயில் வழிபாடு வளர்ச்சி கண்டிருக்கலாம்.

**சைவ மடங்கள் :**

பக்தி இயக்கத்தின் மற்றொரு அடிப்படை நிறுவனமாகப் பல்வேறு சைவ மடங்கள் தோற்றம் கொண்டது. பல்லவர் காலத்தில் தொடங்கி சோழர் காலத்தில் பெருவளர்ச்சி பெற்றது. வெவ்வேறு சைவப்பிரிவைச் சார்ந்த மடங்கள் செல்வாக்கு

பெற்று திகழ்ந்தன. தமிழ் சைவ மடங்களுடன் காளமுக சைவ மடம் மற்றும் கோளகிச் சைவ சமய மடங்களும் ஆங்காங்கே ஏற்படுத்தப்பட்டது. மேலும் குகைகள் எனப்படும் நிறுவனங்களும் மடத்துடன் சேர்ந்து வளர்ச்சி பெற்றன. தமிழ் சைவ மடங்கள் தஞ்சாவூர் பகுதியில் பதிமூன்றாம் நூற்றாண்டில் பெரும் வளர்ச்சி பெற்றது. இம்மடங்கள் திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் ஆகியோர்களின் பெயர்களைத் தாங்கி செயல்பட்டன. அவை திருவிடைமருதூர், திருவானைக்காவல், தில்லை, உசாத்தானம், திருவிழிமிழலை, வலிவலம், திருவாரூர், திருச்செங்காட்டன் குடி என்று பல இடங்களில் இம்மடங்கள் செயல்பட்டன.

குகையடிக் கலகம் என்ற கலகம் கி.பி.1200 ஆம் ஆண்டில் திருத்துறைப்பூண்டியில் நிகழ்ந்ததாக கல்வெட்டுகள் மூலம் அறியமுடிகிறது. தஞ்சாவூர் பகுதிகளில் மூன்றாம் குலோத்துங்கன் காலம் முதல் பல கோயில்களில் குகைகள் என்னும் மடங்கள் இருந்துள்ளன. இவை சிவன் கோயில்களுக்குள் பாதுகாப்புடன் கட்டப்பட்டவை எனக் கூறுகின்றனர். தமிழ் மக்களின் வாழ்க்கையில் இவை மிக முக்கிய பங்காற்றின. தஞ்சைப் பகுதிகளில் திருத்துறைப்பூண்டி, குறுக்கை, சீர்காழி, திருக்கழுமலம், திருவிடவாயில், திருப்புகலூர் திருமாகானம், திருமணஞ்சேரி, முனியூர் ஆகிய இடங்களில் இம்மடங்கள் சைவப் பணியில் ஈடுபட்டன.

இக்குகைளின் தலைவர்கள் முதலிகள் என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் சைவத் திருமறைகளில் வல்லவர்களாகவும் அதனை பாதுகாப்பவர்களாகவும் விளங்கினர். குலோத்துங்கனின் 22ஆம் ஆட்சியாண்டில் கி.பி.1200ல் திருத்துறைப்பூண்டியில் இருந்த குகை தாக்கப்பட்டது. இந்நிகழ்வு குகையிடிக் கலகம் எனப்படுகிறது. இந்த குகையின் தலைவர் திருச்சிற்றம்பலமுடைய முதலிகள் இக்கலகத்தில் இறந்தார். இதன் சொத்துக்கள் பிடுங்கப்பட்டது. வடமொழி அடிப்படையிலான கோளகி போன்ற மடத்திற்கும் தமிழ் அடிப்படையிலான குகை மடங்களுக்கு இடையிலான போட்டியில் இக்கலகம் தோன்றியதாகக் கூறப்படுகிறது.

சைவமடத்துத் தலைவர்கள் சமயம் மற்றும் தத்துவ அறிவை மக்களிடம் பரப்பினர். சிவன் கோயில் நிர்வாகத்தில் செல்வாக்கை நிலை நிறுத்தினர். அவர்களின் சீடர்களாகிய மாகேசுவரர்களும் சிவயோகிகளும் திருக்கோயில் அலுவல்களில் பங்கேற்றனர். வேதாரணியத்தில் சாதுக்கள் மடம், திருவாதிரைமடம், பசுமடம் திருத்துறைப்பூண்டியில் சிவாச்சாரியார் மடம், திருவாரூர் சண்டிகேசுவரன் மடம், மன்னார் குடியில் வண்டுவராபதி மடம் ஆகியவை வேரூன்றி செயல்பட்டு வந்த மடங்கள் ஆகும்.

இவ்வாறு சைவ சமய மடங்களோடு தொடர்புடைய சிவயோகியர் அல்லது சித்தர் அவர் மறைந்தவுடன் அவருக்கு சமாதி ஏற்படுத்தப்பட்டு அதன்வழி அவரை சார்ந்த இன மக்கள், அல்லது அவரை பின்பற்றிய மக்கள், அவரின் அருளாள் பயன்பெற்ற மக்கள் அனைவரும், அவர் சமாதியையும் அதன்வழி ஏற்பட்ட திருக்கோயில்களையும் அதில் உறையும் இறைவனையும் தமது குலத்தெய்வமாக வழிபட்டு பின்பற்றியிருக்கலாம் என்ற ஊகத்தையும் மறுப்பதற்கில்லை.

## 6. அருள்மிகு இராவுத்தர்சுவாமி

பைரவநாதர் திருக்கோயிலுக்கு எதிரே அருள்மிகு இராவுத்தசுவாமி எழுந்தருளியுள்ளார். இவர் கோயிலின் தீர்த்தக் குளத்தின் மறுகரையில் காத்தாயி, கருப்பாயி உடன் அமர் அருள்மிகு இராவுத்தசுவாமியாக அருள்பாலிக்கிறார். மேலும் அருள்மிகு பைரவ நாதர் திருத்தலத்தின் காவல் தெய்வமாகவும் திகழ்கிறார்.

**இராவுத்தர் பெயர் விளக்கம் :**

இராவுத்தர் என்ற பெயர் குதிரை வீரர்களைக் குறிக்கும். தமிழ் முஸ்லீம்களின் ஒருபிரிவினர் இப்பெயர் கொண்டு அழைக்கப்படுகின்றனர். இராவுத்தர் என்ற சொல் குதிரை வீரன் என்ற பொருளில் இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது. "திருப்பெருந்துறைப்புராணம், சைவநாயன்மார் மாணிக்கவாசகர் முன் இறைவன் தோன்றியதைக் குதிரை ராவுத்தனாக இறைவன் மாணிக்கவாசகர் முன் தோன்றியதாகக் குறிப்பிடுகிறது. பரஞ்சோதி முனிவர், சிவபெருமான் குதிரைவணிகராக வந்ததை

"இன்னைறி மன்னர் மன்னர்

இனிமை கர்ந்து இராவுத்தற்கு" என்று தமது திருவிளையாடல் புராணத்தில் குறிப்பிடுகிறார்.

கலிவெண்பா மற்றும் கந்தர் அலங்காரத்தில்



"சூர்க்கொன்ற ராவுத்தனே...

மாமயிலேறும் ராவுத்தனே.... என்று முருகனை குதிரை ராவுத்தனாகக் குறிப்பிடும் பாடல்இடம் பெற்றுள்ளது.

குதிரை வணிகத்தில் ஈடுபட்ட அரேபியர்களுக்கு ராவுத்தர் என்ற சிறப்புப் பெயர் வழங்கப்பட்டுள்ளது. பின்னர் அரசாங்கப்படையில் குதிரைப்படையின் தளபதியாகவும், குதிரை வீரர்களாகவும் இருந்தவர்களைக் குறிக்க இராவுத்தர் என்ற சொல் பயன்பட்டுள்ளது. சிவபெருமானைத் "துய்ய பேருலகிற்கெல்லாம் துலங்கிய ராவுத்தராயன்" என மாணிக்கவாசகர் போற்றுகிறார். குதிரை அணியின் தளபதியை "ராவுத்த கீர்த்தன்" என்று இராமைப்பையன் அம்மானை குறிப்பிடுகிறது. அரேபிய மொழியில் "ராபித்தூர்" என்ற சொல் தமிழில் ராவத்த என்று வழக்கு நிலை அடைந்ததாக சிலர் குறிப்பிடுகின்றனர். எதிரியை எதிர்க்க சித்தமாக இருப்பவன் என்பது "ராபித்தூர்" என்ற சொல்லுக்கான பொருள் ஆகும்.

தமிழில் ராவுத்தர் என்பது தெலுங்கு மொழியில் "ராவுத்" என்று வடிவம் பெற்றுள்ளது. சோழப் பெருமன்னன் இராஜராஜனின் விருதுப் பெயர்களில் "ராகுத்தமிண்டன்" என்பது ஒன்றாகும். இராவுத்தர் என்பது குதிரைவீரர்கட்கு உரிய பெயராகும். மிண்டர் என்பதற்கு மிக்க வல்லமையுடையவர் என்பது பொருள்.

ராவுத்தருக்கும் குதிரைக்கும் உள்ள தொடர்பினை "குதிரைக்காக ராவுத்தர் கொக்காகப் பறந்தார் என்ற இராமநாதபுரத்து வழக்கு ஒன்று தெரிவிக்கிறது. இவ்வாறு இராவுத்தர் என்பது குதிரை வணிகரையும், குதிரையைப் பழக்கியவரையும், குதிரைப்படைத் தளபதியையும், குதிரை வீரர்களையும் குறித்து நின்றுள்ளது.

**குலத்தெய்வ வழிபாடு :**

அருள்மிகு காத்தாயி, கருப்பாயி உடன் உறை இராவுத்தசாமியை இப்பகுதி மக்கள் குலத்தெய்வமாக வழிபடுகின்றனர். முன்னோர் வழிபாடாகிய குலத்தெய்வவழிபாட்டில் இயற்கை வழிபாடு, குலக்குறி வழிபாடு, வீர வழிபாடு, ஆவி வழிபாடு, மரபுவழிபாடு, பிடிமண் தெய்வவழிபாடு, மடத்துத் தெய்வ வழிபாடு, பெருந்தெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு, பரிவாரத் தெய்வ வழிபாடு என்ற பல்வேறு வழிபாட்டு முறைகள் கலந்துள்ளன.

தன் மூதாதையரின் வீரச் செயல்களைப் போற்றி அவர்கள் மீது தெய்வத் தன்மையை ஏற்றி அதன் வழி நடுகல் வழிபாடும், சமாதித் தெய்வ வழிபாடும் தோன்றி பின் அவை குலத்தெய்வ வழிபாடாக எழுச்சி பெற்றுள்ளதை ஆய்வாளர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். மேற்படி வழிபாடுகள் ஒருகாலத்தில் வாழ்ந்த மாந்தரின் வீரமிக்க அல்லது அந்த காலகட்டத்தில் தகுதிமிக்க செயல்பாட்டில் உயர்ந்து நின்று மாய்ந்து போனவரின் நினைவுகளைப் போற்றும் விதமாக அமைந்ததாகும். மேலே கண்ட கருதுகோள்களின் அடிப்படையில் அருள்மிகு இராவுத்தசுவாமியும், மிகப்பெரிய குதிரை வீரராகவோ, குதிரைப்படைத் தளபதியாகவோ இருந்து குறிப்பிட்ட தொகுதி மக்களைக் காத்து இறைநிலையை அடைந்ததாக எடுத்துக் கொள்ளலாம். அதன்வழி அவர் இப்போது காவல் தெய்வமாகவும், குலத்தெய்வமாகவும் வழிபடப்படுகிறார்.

**பரிவாரத் தெய்வம் :**

அருள்மிகு பைரவநாதரின் காவல் தெய்வமாகவும், இப்பகுதி மக்களின் குலத்தெய்வமாகவும் விளங்கும் இராவுத்தசாமி, இப்பகுதியில் சில ஐயனார் கோயிலின் பரிவாரத் தெய்வமாகவும் விளங்குகிறார்.

**முத்தால் ராவுத்தர் :**

ஐயனார் கோயில் பரிவாரத் தெய்வமாக இராவுத்தர் இருப்பது போல இப்பகுதியில் துரோபதையம்மன் கோயிலின் பரிவாரத் தெய்வமாக முத்தால் ராவுத்தர் வழிபடப்படுகிறார். இவர் துரோபதையம்மன் படையின் காவலர் என்ற கருத்தின் அடிப்படையில் இவருக்கு சிலை அமைத்து வழிபடப்படுகிறது. முத்தால் ராவுத்தரின் சிலை, வெள்ளைகுதிரை மேல் அமர்ந்து குதிரையைச் செலுத்தும் வகையில் சிலை வடிவம் உள்ளது. இடக்கையால் குதிரையின் சங்கிலியையும், வலக்கையில் சாட்டையையும் கொண்டுள்ள இவர் காலில் செருப்பும், இடுப்பில் வேட்டியும், தோளில் துண்டுமாகக் காட்சியளிக்கிறார். சில இடங்களில் கைவளைகளுடனும், கழுத்தணிகளுடனும், தாடி, மீசை, தலையில் குல்லா அணிந்து, வண்ணம் தீட்டப்பெற்றச் சுதை சிற்பத்தில் முத்தால் ராவுத்தர் காட்சி தருகிறார்.

**அருள்மிகு இராவுத்தர் :**

தகட்டூரில் கோயில் கொண்டுள்ள அருள்மிகு இராவுத்தர்



உருட்டு விழிகளுடன் கையில் கத்தியையும், தலையில் முண்டாசுடனும், காத்தாயி, கருப்பாயி என்ற இரு மனைவியரை இடப்பக்கமும், வலப்பக்கமும் கொண்டு நின்ற கோலத்தில் சுதைச் சிற்பமாக அருள்பாலிக்கிறார்.

**வழிபாடும் காணிக்கையும் :**

சாம்பிராணி, பத்தி, மலர்மாலைகள் கொண்டு இராவுத்தர் வழிபடப்படுகிறார். இவருக்கு படையலாக, பச்சரிசி வெல்லம் கொண்டு தயாரிக்கப்பட்ட ரொட்டி, களி, சக்கரைப் பொங்கல் ஆகியவை படைக்கப்படுகிறது.

வாழை, பலா, மா என்ற முக்கனிகளும் படையலில் இடம்பெறுகிறது. பாணக்கம், மது உள்ளிட்டவையும் படைக்கப்படுகிறது. இவருக்கு ஆட்டுக் கிடா பலியிடப்படுகிறது. குதிரைகள் மண்ணாலும், சிமெண்டாலும் செய்யப்பட்டு நேர்த்திக் கடன் நிறைவேற்றப்படுகிறது.

அருள்மிகு பைரவருக்கும் இப்பகுதி மக்களுக்கும் காவல் தெய்வமாகவும், குலம் காக்கும் குலத்தெய்வமாகவும் விளங்கும் இராவுத்தர், போர் மரபு, காவல் மரபு, முன்னோர் வழிபாட்டு மரபு ஆகிய வலுவான வழிபாட்டு மரபுகளைத் தன்னகத்தே கொண்டு சிறப்பு நிலையை அடைந்துள்ளது.

## 7. திருக்கோயில் அமைப்பும், வழிபாடும்

**அருள்மிகு பைரவநாதர் திருக்கோயில் :**

நாகப்பட்டினம் மாவட்டம், வேதாரணியம் வட்டம், தகட்டூர் கிராமத்தில் அருள்மிகு பைரவநாதர் திருக்கோயில் அமையப்பெற்றுள்ளது. பட்டுக்கோட்டை வேதாரணியம், திருத்துறைப்பூண்டி வேதாரணியம் பேருந்துத் தடத்திலும், திருவாரூர் காரைக்குடி தொடர்வண்டி தடத்தில் மேலமருதூர் தொடர்வண்டி நிலையத்திலிருந்து 6 கிலோமீட்டர் தொலைவிலும் இத்தலம் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலின் மேற்கே முள்ளியாறு பாய்கிறது. சுமார் 22 செண்ட் நிலத்தில் கோயில் அமைந்துள்ளது.

**திருக்கோயில் அமைப்பு :**

விமானத்துடன் கூடிய கர்ப்பக்கிரகமும் அதனையொட்டிய மகாமண்டபம் மற்றும் பிரகாரமும் அமைந்துள்ளது. முன்புறம் சுமார் 40 அடி இராஜகோபுரம் அமைந்துள்ளது. திருக்கோயில் பிரகாரத்தில் முன்புறத்தில் கொடிமரம், நந்தி, பலிபீடம் ஆகியவை அமைந்துள்ளது. கர்ப்பக்கிரகத்தையொட்டிய மகாமண்டபத்தின் வடபுறத்தில் காசி விஸ்வநாதர் மற்றும் நந்தியும் இடம் கொண்டுள்ளனர். திருக்கோயிலின் பிரகாரத்தைத் தாண்டி நுழைவாயிலில் இடதுபுறத்தில் விநாயகர் அமைந்துள்ளார். கர்ப்பக்கிரகத்தில் பின்புறம் தெற்கிலிருந்து வடக்காக சித்தி விநாயகர் காசிவிசுவநாதர், விசாலாட்சி, தகளபுரீஸ்வரர், வள்ளி தெய்வானையுடன் முருகன், ஆஞ்சநேயர் ஆகிய கடவுளர்கள் தனிக்கோயில் கொண்டு அருள்பாலிக்கின்றனர். சித்தி விநாயகர் திருக்கோயில் அருகில் தீர்த்தக் கிணறு அமைந்துள்ளது.

கர்ப்பக்கிரகத்தின் வடபுறம் சண்டிகேஸ்வரரும், துர்க்கை அம்மனும் அமைந்துள்ளனர். மூலவர் அருள்மிகு பைரவநாதர் சுமார் 3.5அடி உயர கல்லாலான விக்ரகத்தில் காட்சி தருகிறார். உற்சவர் சட்டைநாதர் பஞ்சலோகத்தாலானவர். திருக்கோயில் வசந்த மண்டபத்தில் நாய்,பூதம், குதிரை, யானை, ரிஷபம் உள்ளிட்ட வாகனங்கள் இடம்பெற்றுள்ளது.

**தீர்த்தக்குளம் :**

திருக்கோயில் முன்பு படித்துறையுடன் தீர்த்தக் குளம் அமைந்துள்ளது. திருக்குளத்தின் கரையில் நவக்கிரகங்களுக்கு உகந்த மரங்கள் வளர்க்கப்பட்டுள்ளன. திருக்குளத்தின் மறுகரையில் அருள்மிகு இராவுத்தர் திருக்கோயில் உள்ளது. அதற்கு முன்பு பிரம்மாண்டமான குதிரைச்சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளது.

**பெருந்திருவிழா (பிரம்மோற்சவம்) :**

சித்திரைப் பௌர்ணமியையொட்டி பத்து நாட்கள் பிரம்மோற்சவத் திருவிழா ஆண்டுதோறும் கொண்டாடப்படுகிறது. இதில் தேரோட்டம், சுவாமி வீதியுலா போன்றவை நிகழ்த்தப்படுகிறது.

**சிறப்பு பூஜைகள் :**

கார்த்திகை மாதம் தேய்பிறை அஷ்டமி, மாதாந்திர தேய்பிறை அஷ்டமியின் போது சிறப்புப் பூஜைகளும், யாகங்களும் நிகழ்த்தப் பெறுகின்றன. சித்திரை வருடப்பிறப்பு, கார்த்திகை தீபம், திருவாதிரை, தைப்பொங்கல், சிவராத்திரி போன்ற நாட்களிலும் சிறப்புப் பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் நேரம் :**

திருக்கோயில் காலை 6.00 மணி முதல் நண்பகல் 12.00 மணி வரையிலும், மாலை 4.00 மணி முதல் 8.00 மணி வரையிலும் நடை திறக்கப்பட்டு பூஜைகள் நடத்தப்பெறுகின்றது.

**அர்ச்சகர்கள் :**

தற்போது திரு.ஞானசேகர சிவாச்சாரியார், திரு.சேனாபதி சிவாச்சாரியார் மற்றும் திரு.கணேச சிவாச்சாரியார் ஆகியோர்கள்

இத்திருக்கோயிலில் அர்ச்சகர்களாக இறைப்பணியில் ஈடுபட்டுள்ளனர்.

**அருள்வாக்கு :**

திருக்கோயில் சாமியார் பக்தர்களின் வேண்டுதல், கோரிக்கைகளுக்குத் தனது அருள்வாக்கினால் தீர்வுகளைத் தருகிறார். திருக்கோயிலின் மகா மண்டபத்தில் பீடத்தில் அமர்ந்து பக்தர்களுக்கு ஆசிவழங்குகிறார். தற்போது திரு.இராதகிருஷ்ண சாமியார் அவர்கள் தனது அருள்வாக்கால் பக்தர்களின் கோரிக்கையைத் தீர்த்துவைக்கிறார்.

**நவக்கிரக மரங்கள் :**

திருக்கோயிலையொட்டி நவக்கிரகங்களுக்கு உகந்த மரங்களான அத்தி, அரசு, புரசு, கருங்காலி, வன்னி, வில்வம், மகிழமரம், மஞ்சள் கடம்பு, வேம்பு, பலா ஆகிய மரங்களும், வெள்ளெருக்கு, அருகு தர்ப்பை, செந்நாயுருவி போன்றவையும் வளர்க்கப்படுகிறது. நவக்கிரக தோஷ நிவர்த்திக்கு மரங்கள் வழிபாடு பயன்தருவதாகக் கூறப்படுகிறது.

**வழிபாடு :**

பக்தர்கள் அர்ச்சனை, அன்ன அர்ச்சனை, மாவிளக்கு போடுதல், முடியிறக்குதல், செவ்வரளிப்பு சாற்றுதல் உள்ளிட்ட வழிகளில் அருள்மிகு பைரவநாதரை வணங்கிச் செல்கின்றனர். திருமணம், காது குத்தல் போன்ற நிகழ்வுகளும் இங்கு நிகழ்த்தப்பெறுகின்றது. மன, உடல் ஆரோக்கியம், திருமணத் தடை, பிள்ளைபாக்கியம், வாழ்க்கை மேம்பாடு ஆகிய கோரிக்கைகளை முன் வைத்து, பக்தர்கள் வழிபட்டுத் தீர்வு பெறுகின்றனர்.



## 8. குலத்தெய்வங்களான அருள்மிகு பைரவர் மற்றும் இராவுத்தர்

“ நாள் செய்யாததை கோள் செய்யும்

கோள் செய்யாததை குலத்தெய்வம் செய்யும் “

குலத்தெய்வம் என்பது குலத்தினைக் காக்கின்ற தெய்வம் என்று பொருள் கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட மூதாதையரின் மரபில் தோன்றியதன், வாயிலாக ஒருவொருக்கொருவர் உறவு கொண்டுள்ள மக்களின் தொகுப்பே குலம் ஆகும். குலத்தெய்வத்தை வணங்கினால், கோடி நன்மை உண்டு. குருவை மறந்தாலும் குலத்தெய்வத்தை மறக்காதே என்ற பழமொழிகள் குலத்தெய்வ வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணர்த்தக் கூடியது.

தெய்வ வழிபாடு என்பது அவரவர் சமயத்திற்கு ஏற்ப இறைவனை வணங்குதல் ஆகும். குலத் தெய்வ வழிபாடு என்பது குறிப்பிட்ட இனத்தினர் பிரிவினர், அல்லது மரபினர் தத்தம் குலத்து முன்னோடிகள் அல்லது மூத்தோரை தாங்களும், தங்கள் பங்காளிகளுமாகச் சேர்ந்து அதற்குரிய முறையில் வழிபடுதலாகும்.

தம் குலத்தில், மரபில், வாழ்க்கை சூழலில் முன்னர் பிறந்து வீரவாழ்வு அல்லது பெருவாழ்வு வாழ்ந்து மறைந்த முன்னோர்களைத் தங்கள் குலத் தெய்வமாகக் கொள்வது

மரபாகும்.

பைரவரை வேளாளர், வேட்டுவர் மரபின் பொதுத் தெய்வமாகவும், வேட்டுவ மரபினரின் சிறப்புத் தெய்வமாகவும் குறிப்பிடுகிறார், திரு.கா.அப்பாத்துரையார் (கொங்குத் தமிழக வரலாறு) பைரவர் வழிபாடு நகரத்தார்கள் என்று அறியப்படும், நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் இறை வழிபாட்டில் ஆழ வேரூண்றியுள்ளது.

தகட்டூர் பைரவநாதரையும், இராவுத்தரையும், இப்பகுதியில் வசிக்கும் மக்கள் தங்களுடைய குலத்தெய்வமாக வழிபடுகின்றனர். அகமுடையார், வன்னியர், விஷ்வகர்மா, மேளக்காரர்கள், முத்தரையர் மற்றும் தேவேந்திரர் இனத்தினர் என்று பல்வேறு சமூக மக்கள் பைரவரை குல தெய்வமாகவும், பொதுவான வழிபாட்டுக்குரிய தெய்வமாகவும் வணங்கி வருகின்றனர். குறிப்பாக அகமுடையார்களில் ஐவேலிஐவழி நாட்டு அகமுடையார்களுக்கு பைரவரும், இராவுத்தரும் குல தெய்வமாக உள்ளனர். அருள்மிகு பைரவர் அருள்மிகு இராவுத்தர் இந்த இரண்டு திருக்கோயிலையும் தனித்தனியே குல தெய்வமாகக் கொண்டு காலப்போக்கில் எவ்வித வேறுபாடுமின்றி இரண்டு தெய்வங்களையும் குலத்தெய்வமாக வழிபடத் தொடங்கியதாகத் தெரிகிறது.

சட்டைநாதன், சட்டையப்பர், வைரவநாதன், பைரவநாதன், வைரவமூர்த்தி, பைரவமூர்த்தி, வடுகநாதன், வைரவன், வைரக்கண்ணு, வைரமணி வைரம், வைரத்தம்மாள், பைரவி, இராவுத்தன் என்ற பெயர்கள் இப்பகுதியில் அதிகமாகக் காணப்படக்கூடியப் பெயர்களாகும். குறிப்பாக அகமுடையார்களிடம் இப்பெயர்கள் அதிகமாக இடம்பெற்றுள்ளது. பைரவநாதர் கோயிலில் அருள்வாக்கு சொல்லும் சாமியார் மற்றும் இராவுத்தர் கோயிலில் பூஜை மேற்கொள்பவர்கள் இந்த அகமுடையார் சமூகத்தைச் சேர்ந்தவர்களாகவே உள்ளனர். அருள்மிகு இராவுத்தர் திருக்கோயில் பூஜைகளை பண்டாரத்தேவன்காடு பகுதியைச் சேர்ந்த அகம்படியர்கள் பரம்பரை பரம்பரையாக மேற்கொண்டு வருகின்றனர்.



## 9. தகட்டூரைச் சூழ்ந்த பிற பைரவ தலங்கள்

பாசுபத சைவப் பிரிவுடன் தொடர்புடைய காராணை காரோஹணம் என்ற பெயரில் ஊர்களும் வழிபாடுகளும் குடந்தைக் காரோணம் என்று கும்பகோணத்திலும் நாகைக் காரோணம் என்று நாகப்பட்டினத்திலும் சிறப்புற்றிருந்ததை அறிய முடிகிறது. லகுலீச பாசுபதாகள் குஜராத்தில் காரோகணத்தில் தங்கள் தலைமை பீடத்தை உடையவர்கள்.

தவயோகிகள் தவத்தின் வலிமையால் காயமாகிய இந்த உடலோடு சிவலோகம் செல்வதுண்டு. இந்த நிலைமையே காயரோகணம் எனப்படுகிறது. இதுவே சுருங்கி கோயிலுக்கு பெயராக உள்ளது.

காரோஹணம் என்பது பிற்காலத்தில் காரோணம் என்று மாற்றம் பெற்றதாக அறிஞர்கள் கருதுவார்கள். திருவாரூரில் மாவிரதியர், பாசுபதர் முதலியோர் இருந்து இறைவனை வழிப்பட்டதை கமலாலயம் சிறப்பு எனும் நூல் குறிப்பிடுகிறது. மேலும் அந்நூல் திருவாரூரில் இறைவன் பைரவக் கோலத்தில் வந்து காபாலிகனாகச் சித்து விளையாடல்கள் புரிந்தான் என்றும், இறைவனின் எழிற்கோலத்தைக் கண்ட பக்தர்கள் கபாலீச்சுரம் என்ற பெயரில் திருக்கோயிலை அமைத்து அவ்விறைவனை வழிப்பட்டதாகக் குறிப்பிடுகிறது, தமிழ்நாட்டில் பைரவர் வழிபாடு எனும் நூல், “பைரவர் வழிபாடு” பைரவ உபாஸனை என்ற பெயரில் திருவாரூரில் நடைபெற்றதாகக் குறிப்பிடுவதுடன், திருவாரூர் கோயிலில் இடம் பெற்றுள்ள பைரவர் சிற்பம் கையில் கட்டுவாங்கத்துடன் அமைந்துள்ளது என்றும் அந்நூல்

குறிப்பிடுகிறது.

சீர்காழியில் சட்டையப்பர், தோணியப்பர், ஷேத்திரபாலகர் ஆபதுத்தாரணர், என்று பல பெயர்களில் பைரவர் வழிபாடு இடம் பெற்றுள்ளது. சீர்காழி பைரவருக்கு உரிய தலமாகும். சீர்காழி தலபுராணம் ஷேத்திர பாலகரின் கோலத்தை விளக்குகிறது.

தகட்டூர் தலத்தில் உற்சவ மூர்த்தியாக விளங்கும் சட்டைநாதர் சீர்காழியில் தனிக்கருவறையில் அருள்புரிகிறார். சட்டைநாதர் திருவுருவம் இத்திருக்கோயிலில் அத்திமரத்தில் சுமார் 5 அடி உயரத்தில் நின்ற நிலையில் இருகரங்களுடன் காணப்படுகிறது. இவருக்கு புனுகுச் சட்டம் வெள்ளிக்கிழமை தோறும் சாத்தப்படுகிறது.

மகாபலிச் சக்கரவர்த்தியின் கர்வத்தை அடக்குவதற்கு திருமால் வாமன அவதாரம் மேற்கொண்டு திரிவிக்ரமனாய் மகாபலியை அழித்தார். பின்பு அத்திரிவிக்ரமன் மதம் பிடித்து உலகை அழிக்க முற்பட்டது. அப்போது சிவபெருமான் பைரவ கோலத்தில் திரிவிக்ரமன் தோலை உரித்து சட்டையாகப் போர்த்திக் கொண்டார். தோலை சட்டையாகப் போர்த்திக் கொண்டதால் சட்டைநாதர் என்ற பெயர் ஏற்பட்டது.

இரணியனது உடலை மாய்த்த நரசிங்கத்தைக் (நரசிம்ம அவதாரம்) கட்டுப்படுத்த சிவன் பைரவ கோலத்தில் நரசிங்கத்தைப் பிளந்து அதன் தோலைப் போர்த்திக் கொண்டதால் சட்டைநாதர் எனப் பெயர் பெற்றார் என்றும் கூறுவர்.

ஊழிக்காலத்தில் தோன்றியப் பிரளயத்தால் உலகம் அழிகின்ற போது சிவபெருமான் தோணியப்பர் என்ற பெயரில் உலகத்தைக் காப்பவர் ஆவர். அந்த தோணியப்பர் வடிவமே ஆபதுத்தாரணர் என்ற பெயரில் சீர்காழியில் தனிக் கருவரையில் வழிபடப்படுகிறார். சீர்காழிக்கு திருத்தோணிபுரம் என்ற பெயரும் உண்டு.

சீர்காழி தலத்தில் தெற்குக் கோபுரத்தின் உள்ளே இடப்பக்கமாக வடக்கு நோக்கிய அஷ்டபைரவர் ஆலயம் உள்ளது.

1. சுதந்திர பைரவர்
2. சுயேச்சை பைரவர்
3. லோக பைரவர்
4. கால பைரவர்
5. உக்கிர பைரவர்
6. பிரச்சையா பைரவர்
7. நிர்மான பைரவர்
8. பீஷ்ண பைரவர்

என எட்டுப் பைரவர்கள் அஷ்ட பைரவர்களாக இத்திருக்கோயிலில் அருள்புரிகின்றனர்.

நாகப்பட்டினம் அருள்மிகு காயாரோகணேஸ்வரர் திருக்கோயிலில் உள்ள சட்டைநாதர் பத்துக் கரங்களுடன் காட்சி தருகிறார். அருள்மிகு காயாரோகணர் நீலாயதாட்சி ஆலயத்திற்கு மேற்கில் ஆதிக் காயாரோகணம் என்ற திருத்தலம் உள்ளது. இத்தலத்தில் பைரவநாதர் சட்டையப்பராக கோயில் கொண்டுள்ளார்.

காயம் என்றால் உடம்பு என்று பொருள்படும். ஆரோகணம் என்றால் உடம்போடு சேர்த்து அணைத்துக் கொள்ளுதல் ஆகும். இங்குள்ள சிவபெருமான் புண்டரீக முனிவரின் உடலை தன் லிங்கத்திருமேனியுடன் சேர்த்துக் கொண்டதால் இத்தல இறைவனுக்கு காயாரோகணர் என்றும், இத்தலத்திற்கு காயாரோகணம் என்றும் பெயர் ஏற்பட்டதாக அறிய முடிகிறது. மனித உடலோடு சிவலோகம் செல்ல தவம் செய்தவர் புண்டரீகர். அவரது தவத்தை மெச்சி அவரது உடலை தன்னுள் ஆரோகணம் செய்து முக்தி அளித்தார் இறைவன்.

இத்தலத்தில் புண்டரீகர் சிவனை வழிபட்டபோது காசியின் கங்கை தீர்த்தம் பாதாளத்திலிருந்து பொங்கியதாகவும், அப்போது கங்கைக்கரையில் உள்ள பைரவரும் இங்கு எழுந்தருளினார் என்றும் இவரே கால சம்ஹார பைரவராக இங்கு அருள்பாலிக்கிறார் என்பார்கள்.

அத்துடன் இந்த சட்டையப்பர் என்ற திருவுருவம் இராமதேவர் என்ற சித்தரால் சோழிச்சுவரர் என்பவருக்கு அளிக்கப்பட்டதாகும். காசியில் அளிக்கப்பட்ட இத்திருவுருவத்தைக் கொண்டு சோழிச்சுவரர் ஆதிகாய ரோகணத்தில் கோயில் ஏற்படுத்தியதாக அறிய முடிகிறது.

இத்தலத்தில் இராம தேவர் அடக்கம் பெற்ற ஜீவ சமாதி

உள்ளது. அதன் மீது பைரவபீடம் அமைக்கப்பட்டு சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றது என்று "மகா பைரவம்" நூல் குறிப்பிடுகிறது. இங்கு அழுகுணிச்சித்தரின் ஜீவ சமாதியும் அமைந்தள்ளது. இத்தலம் மிக முக்கியமான பைரவ வழிபாட்டுக்கு உரிய தலமாகும்.(இராமதேவர் சமாதி அழகர் மலையில் அமைந்துள்ளதாகவும் கூறப்படுகிறது)

சப்தவிடங்கத் தலங்களில் ஒன்றான வாய்மூர்நாதர் திருக்கோயில் (எட்டுகுடிக்கு அருகில்) கொண்டுள்ள திருவாய்மூர் ஆலயத்தில் அஷ்டபைரவர்கள் அருள்பாளிக்கின்றனர். திருக்கோயிலின் கிழக்கு திருச்சுற்றில்

**அகோரபைரவர்**

**ஆனந்த பைரவர்**

**பாதாள பைரவர்**

**ஈஸ்வர பைரவர்**

**கால பைரவர்**

**ஈசான பைரவர்**

**உத்தண்டபைரவர்**

பால பைரவர் எனச் சக்தி வாய்ந்த எட்டு பைரவ மூர்த்திகள் சிறப்பாக வழிப்படப் பெறுவதை நாகப்பட்டினம் மாவட்டத் தடயங்கள் நூல் சுட்டிக் காட்டுகிறது.

கும்பகோணத்திலிருந்து வேப்பத்தூர் வழியாக சூரியனார் கோவில் செல்லும் வழியில் திருவிச நல்லூர் தலத்தில் சதுர்கால பைரவர் மிகவும் சிறப்புடையவர். கும்பகோணம் நன்னிலம் சாலையில் உள்ள திருவாஞ்சியம் திருத்தலத்தில் பைரவர் மேற்குப் பார்த்து அமர்ந்த நிலையில் யோக பைரவராகக் காட்சி தருகிறார்.

கும்பகோணம் திருவாரூர் சாலையில் உள்ள திருச்சேறை திருத்தலத்தில் இறைவன் பெயர் சாரபரமேஸ்வரர். திருநாவுக்கரசரால் தனித் தேவாரப் பாடல்பெற்ற பைரவ மூர்த்தமாக இங்குள்ள இறைவன் விளங்குகிறார்.

விரித்த பல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமரு கங்கை

தரித்ததோர் கோலகால பயிரவனாகி வேழம்



உரித்துமை யஞ்சக்கண்டு வொண்டிரு மணிவாய் விள்ளச்

சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே"

என்ற புகழ்பெற்ற தேவாரப் பதிகம் இடம் பெற்ற ஊர்

கும்பகோணம் மயிலாடுதுறை சாலையில் உள்ள க்ஷேத்திரபாலபுரத்தில் க்ஷேத்திரபாலர் என்ற திருப்பெயரில் பைரவர் அருள்புரிகிறார். கும்பகோணததையடுத்த சோழபுரம் ஸ்ரீ பைரவேஸ்வரர் முக்கியமானதொரு பைரவஸ்தலம் திருவையாறு கும்பகோணம் சாலையில் உள்ள பைரவன்கோயில் சிறப்பானதொரு பைரவத்தலமாகும்.

சோழப்பேரரசன் இராஜராஜன் தஞ்சைப் பெரிய கோயிலுக்கு 72 1/2 கழஞ்சு எடையுள்ள தங்கத்திலான க்ஷேத்திரபாலகர் என்ற பைரவர் திருமேனியைச் செய்தளித்துள்ள தகவலை "மகாபைரவம்" நூல் குறிப்பிடுகிறது. ஆவூர் பசுபதீஸ்வரர் கோயிலில் பஞ்ச பைரவர்கள் காட்சியளிக்கின்றனர்.

பைரவர், கஜசம்ஹாரமூர்த்தியாக திருத்துறைப்பூண்டி அருள்மிகு பிறவி மருந்தீஸ்வரர் திருக்கோயிலில் அருள்பாலிப்பது இவ்வாலயத்தின் சிறப்புகளில் ஒன்று. தாருகாவனத்தில் முனிவர்களின் செருக்கை அழிக்க சிவன் பிச்சாடனார் என்ற பைரவ கோலத்தில் வந்து நிகழ்த்திய திருவிளையாடலில், சிவனை அழிக்க முனிவர்கள் மந்திர சக்தியால் ஏவிய யானையைக் கொன்று சிவபெருமான் அதன் தோலை உரித்து ஆடையாக அணிந்து கொண்டார். இதனால் சிவபெருமான் கஜசம்ஹார மூர்த்தி எனப் பெயர் பெற்றார். இது ஒரு பைரவக் கோலமாகும்.

திருத்துறைப்பூண்டி பிறவி மருந்தீசர் ஆலயத்தில் 79 செ.மீ. உயரமுள்ள முற்காலத்திய பைரவர் திருமேனி பற்றியும்,74.5 செ.மீ. உயரமுள்ள கொருக்கை கிராமத்தைச் சேர்ந்த பைரவர் சிற்பம் திருத்துறைப்பூண்டி பிறவி மருந்தீசர் ஆலயத்தில் இருப்பதையும் மகாபைரவம் நூல் குறிப்பிடுகிறது. வேதாரணியம் திருக்கோயிலில் நாய் வாகனம் இல்லாமல் பைரவர் வடிவம் இருப்பதைத் தமிழ்நாட்டில் பைரவ வழிபாடு நூல் குறிப்பிடுகிறது. அத்துடன் இறைவனின் எட்டு வீரச் செயல்களைக் குறிப்பிடும் அட்ட வீரட்டத்தலங்களில் இடம் பெறும் தெய்வத் திருமேனிகளில் பிரம்மன் சிரம் கொய்த

திருமேனி திருக்கண்டியூரிலும், அந்தகாசுரனை அழித்த திருமேனி திருக்கோவிலூரிலும் இடம் பெற்றதையும் மேற்படி நூல் குறிப்பிடுகிறது.

கி.பி.14ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பிட்சாடனார் (பைரவர்) செப்புத் திருமேனி, வேதாரணியம் கோயிலில் அமைந்துள்ளதாகவும் அத்திருமேனி நான்கு கரத்துடன் எழில்மிகு தோற்றத்தில் இருப்பதை "வேதாரண்யம்" நூலின் ஆசிரியர் முனைவர் திரு.கருணானந்தன் குறிப்பிடுகிறார். அத்துடன் கருவறைச் சுவரில் பைரவர் கஜசம்ஹார மூர்த்தியாக ஓவியத்தில் தீட்டப்பட்டுள்ளதையும் குறிப்பிடுகிறார்.

வலங்கைமானுக்கு அருகில் பாடகச்சேரியில் வாழ்ந்த பாடகச்சேரி இராமலிங்க சுவாமிகள் பைரவச் சித்தராக அறியப்படுகிறார். பசிப்பிணி நீக்கம், உடற்பிணி நீக்கம் மற்றும் திருக்கோயில் சீரமைப்பு ஆகியவற்றிற்குத் தனது தெய்வ சக்தியை பயன்படுத்தியவர். 1876 ஆம் ஆண்டு கோவை மாவட்டத்தில் அவதரித்த இவர் வள்ளலாரிடம் ஞானோபதேசம் பெற்றவர். பைரவ உபாசகர், நூற்றுக்கணக்கான நாய்களுக்கு இலைகளில் அறுசுவை உணவு வைத்து விருந்து படைத்தவர். இவர் அழைத்ததும் பெருந்திரளான நாய்கள் அமைதியாக வந்து உணவருந்தி பின் இவர் அனுமதி கொடுத்தவுடன் விடைபெற்றுச் செல்லும் அதிசய நிகழ்வினை நிகழ்த்தியவர்.

யாழ்ப்பாணம், மட்டக்கிளப்பு, திரிகோணமலை உள்ளிட்ட இலங்கைப்பகுதிகளில் உள்ள பைரவர் ஆலயங்களை "மகாபைரவம்" பட்டியலிடுகிறது. வடக்கிலிருந்து தெற்காக, திருமுல்லைவாயில், பூம்புகார், தரங்கம்பாடி, நாகப்பட்டினம், வேளாங்கண்ணி, தோப்புத்துறை, வேதாரணியம், கோடியக்கரை, முத்துப்பேட்டை, அதிராம்பட்டினம், கொடியாம்பாளையம், கட்டுமாவடி என்று டெல்டா மாவட்டங்களில் வரிசையாக அமைந்துள்ள துறைமுக நகரங்களுடன் இலங்கையின் வடக்கு மாகாணப் பகுதிகள், வரலாறு, கலாச்சாரம், பண்பாடு, மொழி, இனம் என்று எல்லாக் கூறுகளாலும் பிணைக்கப்பட்டுள்ளது. வேதாரணியம், கோடியக்கரைக்கு அருகாமையில் இலங்கையின் வடமாகாணப் பகுதிகள் தொடங்குகிற நிலையில் அங்குள்ள பைரவர் திருக்கோயில்களையும் குறிப்பிடுவது அவசியமாகிறது.



யாழ்ப்பாணப் பகுதிகளில், கொக்குவில் கிழக்கு கோணாவளை வைரவர் சுவாமி கோயில், காரை நகரில் உள்ள ஈழத்து சிதம்பரத்தில் திண்ணக்களி வைரவர், தினகரன்பட்டி வைரவர், தெல்லிப்பளை விழிசிட்டி ஞானபைரவசுவாமி ஆலயம் ஆகியவை குறிப்பிடத்தக்க ஆலயங்கள். மேலும், யாழ்ப்பாணம் இணுவில்

1. **மாணிக்க வைரவர் கோயில்**
2. **விளாத்தியடி வைரவர் கோயில்**
3. **காரக்காற் வைரவ கோயில்**
4. **மருதனார் மடம் வைரவர் கோயில் ஆகிய வைரவர் கோயில்கள் குறிப்பிடத்தக்கன.**

அத்துடன் சங்கானை நிகரைஞான வைரவர் ஆலயம், கப்பண்டா ஓடை ஞான வைரவர் ஆலயம், பால ஞான வைரவர் ஆலயம், நிற் சாமம் ஞான வைரவர் ஆலயம், மாவடி ஞான வைரவர் ஆலயம், அரசரடி ஞான வைரவர் ஆலயம், உரும்பராய் காட்டு பைரவர் கோயில், சீதவாக்கை, வைரவர் ஆலயம், மட்டக்கிளப்பு ஸ்ரீநரசிங்க வைரவ சுவாமி ஆலயம், காவலூர் கரம் பொன்கிழக்கு அண்டினோர் துயர் தீர்க்கும் அருள்மிகு ஞான வைரவர், யாழ்ப்பாணம் பழை, தெல்லிப்பழை ஞான வைரவர் கோயில், தலையாழிஸ்ரீ ஞான வைரவர் ஆலயம், திருகோணமலை ஸ்ரீ ஞான வைரவர் கோயில், பாலையூற்று ஸ்ரீ ஞான வைரவர் கோயில், உவர்மலை ஸ்ரீ ஞான வைரவர் கோயில், பெருந்தெரு ஸ்ரீ ஞான வைரவர் கோயில், செக்கடி ஸ்ரீ ஞான வைரவர் ஆலயம் ஆகிய வைரவர் கோயில்கள் சிறப்புமிக்கதாக அறியப்படுகிறது.

## 10.தேய்பிறை அஷ்டமியும், பைரவ முகூர்த்தமும்

தேய்பிறை அஷ்டமியில் பைரவரை வணங்குவது சிறப்புடையதாகும். காலபைரவரை அன்று அஷ்டலட்சுமிகளும் வணங்குவதால், வணங்குபவருக்கு அனைத்து நலன்களும் கிட்டும் என்பது ஐதீகம். செல்வம், தொழில் வளர்ச்சி, குடும்ப மகிழ்ச்சி, ஆரோக்கியம் இவற்றிற்குத் தேய்பிறை அஷ்டமி வழிபாடு பயன்தரக்கூடியதாகும். தேய்பிறை அஷ்டமி நாள் செவ்வாய்கிழமையில் வருவது மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். அன்றைய தினம் செவ்வாடை சாற்றி சிகப்பு அரளிப்பூ மாலைபோட்டு, வெல்லம் கலந்த பாயாசம், உளுந்துவடை, பால், தேன், பழம் வைத்து வெள்ளை பூசணியில் நெய்விட்டுத் தீபம் ஏற்றி விபூதி அபிஷேகம் செய்து வழிபட அனைத்து நன்மைகளும் கைக்கூடும் என்பது நம்பிக்கை.

பைரவர் சனிபகவானின் ஆசிரியராக அறியப்படுகிறார். இதனால் பைரவரை வணங்குதன் மூலம் சனியின் விளைவுகளிலிருந்து நிவாரணம் பெற முடியும். கார்த்திகைமாதம் தேய்பிறை அஷ்டமி பைரவருக்கு உரிய நாளாகச் சொல்லப்படுகிறது. காசியின் காவல் தெய்வமான கால பைரவரின் அவதாரத் திருநாள் கார்த்திகை மாதம் தேய்பிறை அஷ்டமி நாளாகும்.

**பைரவமுகூர்த்தம் :**

ஒரு நாழிகை என்பது 24 நிமிடங்களை கொண்டது. நான்கு நாழிகைகள் சேர்ந்த நேரம் ஒரு முகூர்த்தம் எனப்படும். இந்த கணக்கு மாறுபாட்டுக்கு உட்பட்டது. சூரிய உதயத்திற்கு முன்னும் பின்னும் உள்ள நான்கு நிமிட நேரமே பைரவ முகூர்த்தம் என்று சொல்லப்படுகிறது. உதாரணத்திற்கு காலை சூரிய உதயம் 6 மணி 10 நிமிடம் என்று வைத்துக் கொண்டால் 6.6 நிமிடம் முதல் 6.14 நிமிடம் வரையிலான எட்டுநிமிட நேரமே பைரவ முகூர்த்தம் ஆகும். சரியாக முகூர்த்தத்தைக் கணக்கிட்டு ஆற்ற முடியாத செயல்களை இந்த பைரவ முகூர்த்தத்தில் நிகழ்த்திடவும், பைரவ வழிபாட்டுக்கும், இந்த முகூர்த்தம் பயன்படுத்தப்படுகிறது.

பைரவர் ராகுகேது எனப்படும் பாம்புகளைப் பூநூலாகத் தரித்து சந்திரரை சிரசில்வைத்து காலமே உருவான பைரவரின் உடலில் பன்னிரெண்டு ராசிகளும் அமைந்துள்ளதாகப் பிருஹூத்ஜாதகம் என்ற நூல் குறிப்பிடுகிறது. அவை பைரவரின் தலையில் மேஷமும், வாய்ப்பகுதியில் ரிஷபமும், இருகைகளில் மிதுனமும், மார்பில் கடகமும், வயிற்றில் சிம்மமும், இடையில் கன்னியும், புட்டப்பகுதியில் தனுசும், மர்மம் ஸ்தானத்தில் விருச்சிகமும், தொடைப்பகுதியில் தனுசும், முழங்கால்களில் மகரமும், காலின் கீழ்பகுதியில் கும்பமும், அடிப்பாகத்தில் மீனமும் இடம்பெற்றுள்ளதாகச் சொல்லப்படுகிறது. பைரவரின் சேவகர்களாக நவகோள்கள் இருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

**திருச்செங்காட்டன் குடியில் பைரவர் :**

சிறுந்தொண்ட நாயனாரிடம் பிள்ளைக்கரிக் கேட்டுவந்த சிவன் பைரவர் வடிவிலேயே வந்ததாக சிறுத்தொண்டர் கதையில் கூறப்படுகிறது. செந்நிற சடாமுடியைக் குடுமியால் கட்டி தும்பைப்பூக்களைச் சூடி கருப்புச் சட்டையில் வந்ததாகச் சொல்லப்படுகிறது.

## 11. அருள்மிகு மாப்பிள்ளைவீரன்

தகட்டூரின் மற்றுமொறு புகழ்பெற்ற திருக்கோயில் மாப்பிள்ளை வீரன் திருக்கோயிலாகும். இந்தக் கோயிலின் தோற்றமும் அடக்கஸ்தலம் சமாதித் தெய்வம் தோற்றத்துடன் தொடர்புடையது. முன்பொரு காலத்தில் திருமேனியம்மன் என்ற காளி தேவியின் வழிபாடு இங்கு நிகழ்ந்து வந்துள்ளது. சித்தர் ஒருவர் இவ்வழிபாட்டை மேற்கொண்டு ஆதியங்காடு என்ற இப்பகுதியில் வாழ்ந்து வந்துள்ளார்.

சித்தர் முக்தியடைந்த பின் அவருக்கு அங்கேயே சமாதி வைக்கப்பட்டது. அவர் சமாதியாக வழிபடப்பட்டு வந்த நிலையில் அந்த சமாதியை மேம்படுத்த கல்கட்டுமானம் மேற்கொள்ள முயன்றபோது மண்வெட்டி கொண்டு நிலத்தை தோண்டினார். அப்போது மண்வெட்டி ஒரு கல்லில் பட்டு கல்லிலிருந்து ரத்தம் வந்ததாம். அவ்விடத்தின் தெய்வ சக்தியை உணர்ந்து அவ்வாறு ரத்தம் வடிந்தக் கல்லைத் தெய்வமாக வழிபடத் தொடங்கினர்.

அக்கல்லில் ஓம் என்ற மந்திரத்தை எழுதியும் அதன்மீது மண்டபம் கட்டியும், அதனை மாப்பிள்ளை வீரன் என்ற பெயரோடு வழிபட்டு வந்திருக்கின்றனர். பின்னர் அத்தெய்வம் காவல் தெய்வமாகவும், இப்பகுதி மக்களின் குலத் தெய்வமாகவும் வழிபடப்படும் மரபுக்கு வந்துள்ளது.

இந்த கோயில் பற்றிய செய்தி ஆங்கிலேயர்களின் குறிப்புகளில் காணப்படுகிறது. ஹெமிங்வே (Hemingway) என்ற ஆங்கிலேயர் எழுதிய Gazetteer Tanjore என்ற தஞ்சாவூர் மாவட்ட விபர நூலில் இந்த கோயில் திருவிழாக் காலத்தில் 7000க்கு மேற்பட்ட மக்கள் கூடுவார்கள் என்றும் மிகுந்த எண்ணிக்கையிலான மக்களை ஈர்க்கும் மையமாக இக்கோயில் திகழ்ந்ததாகக் குறிப்பிடுகிறார்.

பங்குனி மாதத்தில் 18 நாள் விழா நடைபெறும். அருள்மிகு தகட்டூர் பைரவர் திருக்கோயில் சாமியார் இந்நிகழ்வில் பங்கேற்று அங்கு அருள்வாக்கு சொல்கிறார். மேலும் முத்திரைப்பிரம்பு மோதிரம் அளித்தல் என்ற நிகழ்வும் நடைபெறுகிறது. தகட்டூர் பைரவர் மற்றும் மாப்பிள்ளை வீரன் திருக்கோயில்கள் வழிபாடு சார்ந்தச் சடங்குகள் வழியும், வழிபடும் மக்களின் வழியும் ஒருவித இணைப்பைக் கொண்டுள்ளது.

## 12.இராசராச சோழனும் பைரவ வழிபாடும்

இராசராசன் பைரவ வழிபாட்டை பெரிதும் ஏற்றவனாகக் காணப்படுகிறான் என்பார்கள் "சோழர் வரலாறு" நூலாசிரியர் பேராசிரியர் திரு.சி.கோவிந்தராசனார் மற்றும் முனைவர் சி.கோ.தெய்வநாயகம் ஆகியோர். மேலும் இவர்கள் இராசராசச் சோழன், க்ஷேத்திரபாலர் என்ற பெயரில் நகரங்களின் காவல் தெய்வமாகப் பைரவ சிவமூர்த்தத்தை எடுப்பித்து வழிபட்டுள்ளதாக குறிப்பிடுகின்றனர். அந்த வகையில் தனது ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் பைரவருக்கான திருக்கோயில்களை ஏற்படுத்தியுள்ளது, வரலாற்றில் பதிவாகியுள்ள செய்தியாகும். அவ்வாறு பைரவருக்கான கோயில்கள் எழுப்பிக்கப்பட்ட ஊர்கள் க்ஷேத்திரபாலபுரம் என வழங்கப்பட்டுள்ளது. இராசராசச் சோழனின் பட்டத்தரசியான உலோக மாதேவியார் எழுப்பித்த க்ஷேத்திரபாலகர் என்ற பைரவருக்குகானக் கோயில் திருவலஞ் சுழியில் உள்ளது.

"இராசராச தேவர் மகாதேவி தந்தி சக்தி விடங்கியரான ஸ்ரீ ஓலோகமாதேவியார் உய்யக்கொண்டார் வளநாட்டுப் பாம்பூர் நாட்டுத் திருக்குடமூக்கின்பால் திருவலஞ்சுழியில் நாம் எடுப்பித்த திருக்கற்றளி பிள்ளையார் க்ஷேத்திரபால தேவர்க்கு" என்று தென்னந்திய கல்வெட்டுத் தொகுதி (எட்டு) பதிவு செய்துள்ளது.

பரிவார தேவதைகளில் ஒன்றாகக் கருதப்பட்ட க்ஷேத்திரபாலகர் என்ற பைரவ மூர்த்தம், இராசராசச் சோழன் காலம் முதல் தனிக்கோயிலில் எழுந்தருளச் செய்யப்பட்டார். இராசராசச் சோழன் காலத்தில் பொதுவாக க்ஷேத்திரபாலகர் வழிபாடு சிறந்திருந்ததைக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது என்று 'மகாபைரவம்' நூல் குறிப்பிடுவதுடன் தஞ்சைப் பெரிய கோயிலுக்கு 72 1/2 கழஞ்சு எடையுள்ள தங்கத்தினாலான ழி~த்திரபாலகர் திருமேனியைச் செய்தளித்தான் என்பதையும் பதிவு செய்கிறது.

இராசராசச் சோழனின் 26 ஆம் ஆட்சியாண்டில் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த கங்கைகொண்டானில் ஸ்ரீகைலாயத்து க்ஷேத்திரபாலகர் வழிபாட்டிற்காக நிலம் தானமாக வழங்கப்பட்டதையும் அறிய முடிகிறது.

தஞ்சை பெருவுடையார் கோயிலில் கோஷ்ட மூர்த்தங்களாக பிட்சாடனார், பைரவர் சிற்பங்களும், பெரிய நந்தியினைத் தாண்டி முகமண்டபத்தின் வாயிலின் இடப்புறம் எட்டுக் கரங்களையுடைய பைரவர் கிழக்கு நோக்கி அருள்புரிவதும் குறிப்பிடத்தக்கது. மேலும் இராஜேந்திர சோழன் எழுப்பித்த கங்கை கொண்ட சோழபுரம் கோயிலில் காப்பக் கிரக மாடங்களில் கால சம்கார மூர்த்தி, காலபைரவர், பிட்சாடணார் ஆகிய திருவுருவங்கள் பைரவ வழிபாட்டின் தொடர்ச்சியை விளக்குகிறது.

## 13. தோஷ நிவர்த்திக்கான பைரவர் வழிபாடு

வேண்டுதல்கள் நிறைவேறவும், தோஷ நிவர்த்திக்கும், தடைகள் விலகவும், பைரவருக்குச் செய்ய வேண்டிய வழிபாட்டு முறைகள் பற்றிப் பல்வேறு நூல்கள் எடுத்துரைக்கின்றன. ஆகம சிற்பக் களஞ்சிய கலைமணி திரு.எஸ்.நாராயணசுவாமி அவர்கள் தனது “மகா பைரவம்” நூலில் தோஷ நிவர்த்திக்கு உரிய பைரவர் வழிபாட்டு முறைகள் எவ்வாறு மேற்கொள்ள வேண்டும் என்பது பற்றியப் பட்டியல் ஒன்றைத் தருகிறார். அவையாவன,

இறந்த முன்னோர்களால் ஏற்படும் பிதிர்தோஷம் விலக காசி, இராமேஷ்வரத்தில் செய்யும் திலாஹோமம் போன்று, பைரவர் சந்நிதியில் பிதுர் பூசை செய்து நன்மை பெறமுடியும்.

வெள்ளிக்கிழமை, ராகு காலத்தில் பைரவருக்கு வெண்தாமரை மலர் மாலை அணிவித்து வெண்பூசணி சாம்பார் கலந்த சாதம், அதிரசம் படையலிட்டு புனுகு பூசி அர்ச்சனை செய்தால் அர்த்தாஷ்டம சனி தொல்லையிலிருந்து விலக முடியும்.

திங்கள் கிழமை காலை 7.30 மணியிலிருந்து 9.00 மணிக்குள் பைரவருக்கு அல்லிமலர் மாலை அணிவித்து சாம்பல் பூசணியில் விளக்கேற்றி, பாகற்காய் கலந்த அன்னம் படையலிட்டு, புனுகு பூசி அர்ச்சனை செய்தால் கண்டச் சனியின் பிடியிலிருந்து விடுபட முடியும்.

அஷ்டமச் சனியின் கொடுமையிலிருந்து விடுபட சனிக்கிழமை இரவு 7.30லிருந்து 9.00 மணிக்குள் பைரவருக்கு கருங்குவளை



மாலை, நீலோற்பவ மலர் மாலை, வடைமாலை அணிவித்து, கருப்புப்பட்டு சாத்தி, இரும்பு அகல் விளக்கில் நல்லெண்ணெய் தீபம் ஏற்றி, கறிவேப்பிலை சாதம் படையலிட்டு புனுகு பூசி அர்ச்சனை செய்ய வேண்டும்.

ஏழரையாண்டுச் சனியின் ஆதிக்கம் குறைய சனிக்கிழமை ராகு காலத்தில் பைரவருக்கு வெற்றிலை மாலை, வடைமாலை சாத்தி, இரும்பு அகல் விளக்கில் இலுப்பை எண்ணெய் தீபம் ஏற்றி, கறிவேப்பிலை சாதம், பாகற்காய் கூட்டு, பால் பாயாசம் படையலிட்டு, புனுகு பூசி அர்ச்சனை செய்ய வேண்டும்.

செவ்வாய் கிழமை ராகு காலத்தில் பைரவருக்கு செவ்வரளி மாலை அணிவித்து புனுகு பூசி, செம்மாதுளை, துவரம் பருப்பு பொடி கலந்த அன்னம் படையலிட்டு அர்ச்சனை செய்தால் சகோதர ஒற்றுமை கூடும்.

எதிர்ப்புகள் அகலவும், வெற்றிகள் குவியவும் செவ்வாய் கிழமை, எலுமிச்சை மாலை அணிவித்து எலுமிச்சை பழத்தில் நெய் தீபம் ஏற்றி சிவப்பு குங்குமம் கலந்த நீரால் அபிஷேகம் செய்து புனுகு பூசி அர்ச்சனை செய்ய வேண்டும்.

கல்வியில் தடைகள் அகன்று சிறப்படைய புதன்கிழமை பைரவருக்கு மரிக்கொழுந்து மாலை அணிவித்து புனுகு பூசி அர்ச்சனை செய்ய வேண்டும். பாசிபருப்பு அன்னம், பாசிபருப்பு பாயாசம் படையலிட வேண்டும்.

வியாபாரத்தில் வெற்றியடைய புதன்கிழமை காலை 10.30 - 12.00 மணிக்குள் மரிக்கொழுந்து மாலை அணிவித்து சந்தனக் காப்பு, புனுகுக் காப்பு செய்து பாசிப்பருப்பு சுண்டல், பாசிப்பருப்பு பாயாசம் படையலிட்டு அர்ச்சனை செய்ய வேண்டும்.

குழந்தைபேறு கிடைத்திட வியாழக்கிழமை காலை 7.30 மணியில் பைரவருக்கு முந்திரிப் பருப்புடன் கூடிய முந்திரிக் கொட்டையால் மாலை செய்வித்து அணிவிக்க வேண்டும். சந்தனக் காப்பு, புனுகு சாத்தி முந்திரிப் பருப்பு, கொண்டைக் கடலை சுண்டல், அன்னம் படையலிட்டு அர்ச்சனை செய்து அன்னதானம் செய்ய வேண்டும்.

திருமணத் தடை நீங்கிட வெள்ளிக்கிழமை ராகு காலத்தில்

பைரவருக்கு தாமரை மலர் மாலை அணிவித்து பானகம், சர்க்கரைப் பொங்கல் படையலிட்டு, சந்தனக் காப்பும், புனுகு சாத்தியும் அர்ச்சனை செய்ய வேண்டும்.

நாக தோஷம் நீங்க வெள்ளிக்கிழமை ராகுகாலத்தில் பைரவருக்கு பாலாபிஷேகம் செய்து, நாகலிங்கப்பூ மாலை அணிவித்து புனுகு பூசி, பால், சாதம், பால் பாயாசம் படையலிட்டு அர்ச்சனை செய்ய வேண்டும்.

மாங்கல்ய தோஷம் நீங்க செவ்வாய் கிழமை எமகண்டத்தில் மஞ்சள் கொம்பு மாலை, மஞ்சள் கயிறு சமர்ப்பித்து சந்தனக்காப்புச் செய்து சர்க்கரைப் பொங்கல், பானகம் படையலிட்டு அர்ச்சனை செய்ய வேண்டும்.

விஷ பயம் நீங்கிட சனிக்கிழமை ராகுகாலத்தில் பைரவருக்கு சிறியா நங்கை, பெரியா நங்கை இலையுடன் கூடிய நாகலிங்கப் பூ மாலை சாத்தி அர்ச்சனை செய்ய வேண்டும்.

பிரேத சாபம் நீங்க அமாவாசை நாளில் எமகண்டத்தில் நீலநிற பூ மாலை அணிவித்து புனுகு பூசி அர்ச்சனை செய்ய வேண்டும்.

கலைத் துறையில் சாதனை செய்திட வெள்ளிக் கிழமை ராகுகாலத்தில் ரோஜா மாலை, வெள்ளி ஆபரணங்கள் அணிவித்து சந்தனக்காப்பு புனுகு பூசி அர்ச்சனை செய்து வஸ்திர தானம் செய்ய வேண்டும் என்று மேற்படி நூல் தெரிவிக்கிறது.



## 14. பைரவர் தொடர்புடைய பாடல்கள்

திருச்சேறைப்பதிகம் திருநாவுக்கரசர் தேவாரம்

**"விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமரு கங்கை**
**தரித்ததோர் கோல கால பயிரவனாகி வேழம்**
**உரித்துமை யஞ்சக்கண்டு வொண்டிரு மணிவாய்விள்ளச்**
**சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே"**

அஷ்ட பைரவர்கள்

பைரவச் சருக்கம் திருபத்தூர் புராணம்

மாற்றருஞ்சீர் சீதாங்க வைரவனே ருரு வைரவன் னென்றும் மெய்ப்

போற்று சண்ட வைரவனே குரோத பைரவனே செம்பொன்னார்மேனி

மேற்றிகழன் மத்த வைரவனே காபால பைரவனே வென்றி

யேற்றுயர் பீடண வைரவன்னொடு சங்கார வைரவ னென்றெண்மீர்

ஸ்வர்ணாகர்ஷண பைரவாஷ்டகம்

ஸ்ரீ துர்க்கைச் சித்தர்

தனந்தரும் வயிரவன் தளரடி பணிந்திடின்
தளர்வுகள் தீர்ந்து விடும்
மனந்திறந் தவன்பதம் மலரிட்டு வாழ்த்திடின்

மகிழ்வுகள் வந்துவிடும்
சினந்தவிர்த் தன்னையின் சின்மயப் புன்னகை
சிந்தையில் ஏற்றவனே
தனக்கிலை யீடு யாருமே என்பான்
தனமழை பெய்திடுவான்
ஜெய ஜெய வடுக நாதனே சரணம்
வந்தருள் செய்திடுவாய்
ஜெய ஜெய க்ஷேத்திர பாலனே சரணம்
ஜெயங்களைத் தந்திடுவாய்
ஜெயஜெய வயிரவா செகம் புகழ் தேவா
செல்வங்கள் தந்திடுவாய்
தனக்கிலை யீடு யாருமே என்பான்
தனமழை பெய்திடுவான்

ஆபதுத்தாரணம் மாலை

(தருமையாதினம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள்)

சீர் கொண்ட செம்பொற் றிருமேனி யும்செம் முகமலருங்

கார்கொண்ட சட்டையுந் தண்டாயுதமுங் கணங்களெட்டுங்

கூர்கொண்ட மூவிலைச் சூலமுங் கொண்டருள் கூர்ந்த கொன்றைத்

தார்கொண்ட வேனியனேகாழி யாபதுத் தாரணனே.

சட்டைநாதர் வாழ்த்து

சீர்காழிப் புராணம்

“துங்க மாமணித் தூணில் வந்து
இரணியன் தோள்வலிவுதனை வாங்கும்



சிங்கஏற்று உரி அரைத்து அசைத்து
உலகு எல்லாம் தேர்ந்து அளந்து அவன்மேனி
அங்கம் யாவும், ஓர் கதையதாய்க்
கொண்டு அதன் அங்கியாய்ப் புனைகாழி
சங்கவார் குழைச் சட்டநாயகன்
துணைத் தாமாரைச் சரண் போற்றி”

திரு அம்பர் மாகாளம் பதிகம் சம்பந்தர் தேவாரம்
பழகமா மலர்பறித் திண்டை கொண்
டிறைஞ்சுவார் பாற் செறிந்த
குழகனார் குணம்புகழ்ந் தேத்துவா
ரவர்பலர் கூடநின்ற
கழகனார் கரியுரித் தாடுகங்
காளர்நங் காளியேத்தும்
அழகனார் அரிவையோ டிருப்பிடம்
அம்பர்மா காளந்தானே

திருமந்திரத்தில் வைரவர்
நடந்த வயிரவன் சூல கபாலி
கடந்த பகைவனைக் கண்ணது போக்கித்
தொடர்ந்த உயிரது உண்ணும் பொழுது
படர்ந்த உடல்கொடு பந்தாட லாமே

ஆலய விக்ரக நிர்மாண ஆயாதி சிற்ப ரகசியம் நூலில்

அரவா பரணன் நிருவாணி
ஆலுந்தலை மாலையு மணிந்து
நிரமே குருதி நேர் நிறத்தோன்
நின்றே பைரவ ஊர்தியுடன
கரமேல் டமருக பாசம் ஒளி
காலும் சூல கபாலமுமாய்

சிரமேல் ரக்த நிறவேணி
சீர்குறை மதியுள பைரவமே

**திருநாகைக் காரோணப் புராணம்**

"பெருகுதன் புகழுளேனோர் பிரதாப மடக்கியாங்கு
முருகுதங் கலரின் மேலான முண்டவெண் கபாலத் தூடு
கருகுபைங் கொண்டன் மேனி கவிழ்த்திடு செந்நீரேற்ற
திருகுதீர் வடுகப் புத்தேள் சேவடி சென்னி சேர்ப்பாம்"



## 15.சிவமூர்த்திகள் மற்றும் பைரவ வடிவங்கள்

சைவ ஆகமத்தின்படி மூல மூர்த்தியாக விளங்குபவர் சிவலிங்கம் இலிங்கம் என்பதற்குப் படைத்தல், காத்தல் முதலியவைகளால் உலகத்தைச் சித்தரிப்பது என்று பொருள் கூறுவர். புராணத்தின் அடிப்படையில் வழிபடப்படும் சிவமூர்த்தங்கள் அனைத்தும் இலிங்கத்திலிருந்து தோற்றம் பெற்றதாகும். இந்த வடிவங்கள் அறுபத்து நான்கு. இவை அஷ்டாஷ்ட விக்கிரகங்கள் (8x8=64) என்று அழைப்பர். இதில் சிறப்பாக இருபத்தைந்து வடிவங்களை மகேசுவரவடிவங்கள் என்று கூறுவர். அதேபோல இந்த மகேசுவர வடிவங்களில் சில வடிவங்கள் சம்ஹார வடிவங்களாகக் (அழித்தல்) கூறுவர். அதில் ஒரு சிறந்த வடிவம் பைரவ வடிவம்.

இறைவனின் இந்த பைரவ கோலத்தில் இறைவன் மற்ற பிற தெய்வங்களுக்குத் தம் வல்லமையை உணர்த்த எடுத்த திருக்கோலத்தையும், அரக்கர்கள் உள்ளிட்டவர்களை அழித்ததையும், உயிர்கள் உய்விக்க திருவிளையாடல் புரிந்த கோலத்தையும் இந்த பைரவ திருக்கோலத்தில் காணமுடியும்.

**அறுபத்து நான்கு சிவமூர்த்திகள்**

| | |
|---|---|
| 1. இலிங்கமூர்த்தி | 35. காலந்தகமூர்த்தி (கால சம்ஹார) |
| 2. இலிங்கோற்ப மூர்த்தி | 36. காமதகன மூர்த்தி |
| 3. முகலிங்க மூர்த்தி | 37. இலகுளேசுரமூர்த்தி |
| 4. சதாசிவ மூர்த்தி | 38. பைரவமூர்த்தி |

5. மகாசதாசிவமூர்த்தி
6. உமாமகேசமூர்த்தி
7. சுகாசன மூர்த்தி
8. உமேச மூர்த்தி
9. சோமஸ்கந்த மூர்த்தி
10. சந்திரசேகர மூர்த்தி
11. ருஷபாரூட மூர்த்தி
12. ருஷபாந்திக மூர்த்தி
13. புஜங்கலளித மூர்த்தி
14. புஜங்கதிராச மூர்த்தி
15. சந்தியாநிருத்த மூர்த்தி
16. சதாநிருத்த மூர்த்தி
17. சண்டதாண்டவ மூர்த்தி
18. கங்காதர மூர்த்தி
19. கங்கா விஸாஜன மூர்த்தி
20. திரிபுராந்தக மூர்த்தி
21. கலியாணசுந்தர மூர்த்தி
22. அர்த்தநாரீசுர மூர்த்தி
23. கஜயுத்த மூர்த்தி
24. சுவராபக்ன மூர்த்தி
25. சார்த்தூல ஹரமூர்த்தி
26. பாசுபத மூர்த்தி
27. கங்காள மூர்த்தி

39. ஆபதோத்தாரண மூர்த்தி
40. வடுகமூர்த்தி
41. க்ஷேத்திரபாலகமூர்த்தி
42. வீரபத்திரமூர்த்தி
43. அகோராஸ்த்ர மூர்த்தி (அகோர)
44. தக்ஷயஞ்ஞஹத மூர்த்தி
45. கிராத மூர்த்தி
46. குருமூர்த்தி
47. அசுவாரூடமூர்த்தி
48. கஜாந்திகமூர்த்தி
49. ஜலந்திரவத மூர்த்தி
50. ஏகபாததிரிமூர்த்தி
51. திரிபாதத்ரிமூர்த்தி
52. ஏகபாத மூர்த்தி
53. கௌரீவரப்த மூர்த்தி
54. சக்ர தானஸ்வரூப மூர்த்தி (சக்ரதான)
55. கௌரீலீலா சமந்விதமூர்த்தி
56. விஷாபஹரண மூர்த்தி
57. கருடாந்திக மூர்த்தி
58. பிரமசிரச்சேத மூர்த்தி
59. கூர்ம சம்மார மூர்த்தி (சவர்ம சம்ஹார)
60. மச்ச சம்மார மூர்த்தி (சம்ஹார)
61.வுராக சம்மார மூர்த்தி (சம்ஹார)

28. கேசவார்த்த மூர்த்தி (சங்கர நாராய)
62. பிரார்த்தனாமூர்த்தி

29. பிஷாடன மூர்த்தி
30. சிம்மன மூர்த்தி

63. ரக்தப்பி~லீப்பிர தானமூர்த்தி
64. சிஷ்ய பாவமூர்த்தி



31. சண்டேசானுக்கிரமூர்த்தி
32. தக்ஷிணாமூர்த்தி
33. யோகதக்ஷிணாமூர்த்தி
34. வீணாதக்ஷிணாமூர்த்தி

## 16. அஷ்ட பைரவர்

1. அஸிதங்க பைரவர் - பிராம்மி
2. ருரு பைரவர் - மகேஸ்வரி
3. சண்ட பைரவர் - கௌமாரி
4. குரோத பைரவர் - வைஷ்ணவி
5. உன்மத்த பைரவர் - வராஹி
6. காபால பைரவர் - இந்திராணி
7. பிஷண பைரவர் - சாமுண்டா
8. சம்ஹார பைரவர் - மகாலஷ்மி

இந்த எட்டு பைரவர்களும் எட்டு எட்டு பைரவர்களாகப் பிரிந்து 64 பைரவ மூர்த்திகளாகத் திகழ்கின்றனர்.

அறுபத்து நான்கு பைரவமூர்த்திகள் :

| | | | |
|---|---|---|---|
| 1. | அஸிதங்க பைரவர் | 33. | உன்மத்த பைரவர் |
| 2. | விசாலாக்ஷ பைரவர் | 34. | வடுநாயக பைரவர் |
| 3. | மார்த்தாண்டா பைரவர் | 35. | சம்ஹார பைரவர் |
| 4. | மோதகப்பிரியா பைரவர் | 36. | புத்த பைரவர் |
| 5. | ஸ்வச்சந்த பைரவர் | 37. | வேதாள பைரவர் |
| 6. | விக்ன சந்துஸ்த பைரவர் | 38. | த்ரிநேத்ர பைரவர் |
| 7. | கேஷர பைரவர் | 39. | த்ரிபுராந்தக பைரவர் |
| 8. | சுகஸ்ர சார பைரவர் | 40. | வரத பைரவர் |
| 9. | ருரு பைரவர் | 41. | காபால பைரவர் |
| 10. | குரோத தம்ஸ்தர பைரவர் | 42. | சஸி பிஷ்ஷான பைரவர் |
| 11. | ஜடாதர பைரவர் | 43. | ஹஷ்த சரம்பரதார பைரவர் |
| 12. | விஸ்வரூப பைரவர் | 44. | யோகீச பைரவர் |
| 13. | விருபாக்ஷ பைரவர் | 45. | ப்ரம்ம ரக்ஷஸ பைரவர் |
| 14. | பார பைரவர் | 46. | சர்வாஜ்ன பைரவர் |
| 15. | வஜ்ர ஹஸ்த பைரவர் | 47. | சர்வ தேவஸ பைரவர் |
| 16. | மகாகாய பைரவர் | 48. | சர்வ பூத ஹிதஸில்த பைரவர் |
| 17. | சந்த பைரவர் | 49. | பிஷ்ணா பைரவர் |
| 18. | ப்ரளயாந்தக பைரவர் | 50. | பாய கர பைரவர் |
| 19. | பூமிகாம்ப பைரவர் | 51. | பார்வதி வாஸ பைரவர் |
| 20. | நீலகண்ட பைரவர் | 52. | காலாக்னி பைரவர் |
| 21. | விஷ்ணு பைரவர் | 53. | மஹாரௌத்ர பைரவர் |
| 22. | குல பால பைரவர் | 54. | தக்ஷண பைரவர் |
| 23. | முண்ட பால பைரவர் | 55. | முகார பைரவர் |
| 24. | காம பால பைரவர் | 56. | அஸ்திர பைரவர் |
| 25. | குரோத பைரவர் | 57. | சம்ஹார பைரவர் |
| 26. | பிங்கலாக்ஷண பைரவர் | 58. | அதி ரிக்தாங்க பைரவர் |
| 27. | அபரரூப பைரவர் | 59. | காலாக்னி பைரவர் |
| 28. | தரபால பைரவர் | 60. | ப்ரியங்கார பைரவர் |
| 29. | குடில பைரவர் | 61. | கோர நாட பைரவர் |
| 30. | மந்த்ர நாயக பைரவர் | 62. | விசாலாக்ஷஸ பைரவர் |
| 31. | ருத்ர பைரவர் | 63. | யோகீச பைரவர் |
| 32. | பிதாமகா பைரவர் | 64. | தக்ஷ சம்ஸ்தித பைரவர் |

## *17. 1970களில் வெளிவந்த 1961 ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையில் தகட்டூர் அருள்மிகு பைரவநாதர் திருக்கோயில் பற்றியச் செய்திகள்*

Census of India 1961 Volume IX Tamil Nadu Part-XI-D Temples of Tamil Nadu Volume VII(1) Thanjavur K.Chockalingam IAS Director of Census Operation Tamilnadu & Pandicherry Page 399

THAGATTUR

Sri Bairavanathaswamy Temple :

This Ancient saivite Shrine is Situated in Thagattur village, above six kilometres from Melamarudhur railway station on the Thiruthuraipoondi-point calimore Route. Buses Playing between Vedharanyam and Thiruthuraipoondi, pass through this village. The population of this village is 3,330 (1661 males and 1669 Females) according to the 1961 census.

The Temple Which faces east is situated in beautiful surrounding with green paddy field arround river Mulliyar is flowing to the west of it. It covers an area of about twenty two cents. It has a single prakaram and two sancta apart from a forty feet high Rajagopuram in the front with plaster figures on it. The presiding deity of the temple Lord Bairavanathar is represented by a 3.5 feet high granite Vigraham. His festival Idol is made of Panchalogam. A note worthy feature of this shrine is the presence of sri Bairavar in the sanction sanctorum in the form of a vigraham (with his



conventional vehicle of dog) instead of a Lingam as is usually found in other Siva Temples. The festival Idol of Sri Bairavar is also very attractive.

The old Garbagaraham and Arthamandapam which were built of brick and mortar have been dismantled and rebuilt with stone. A Kumbabishegam was performed in 1966. There are separate sancta here for several sub deities like Vinayagar, Subramaniyar, Ambal, Visalakshi, Mahalingam and Chandikeswara around the prakaram. A new vasantha mandapam has been constructed on the north-eastern corner of the prakaram.

The presiding deity, Sri Bairavanathaswamy is said to be very powerful. The lord is said to readily answer to the prayers of his ardent devotees. This is evidenced by the fact that even now a large number of devotees come here particularly on Monday and Friday, when the priest of the temple, possessed by the God. Predicts the future of the devotees. Devotees undergo tonsuring in fulfilment of their vows. Those who are possessed by evil spirites, stay in this temple and offer worship till they are cured.

Saint sundaranar had composed several sacred verses in praise of the presiding deity.

There is a guardian deity for this temple, who is locally called "Ravuthar" as he is in the form of a Muslim in a tiny shrine opposite to the temple. Mondays and Fridays are considered specially sacred to this deity. When a large number of devotees congregate before his shrine offering bread and Jaggery water to him.

Poojas are performed four times daily. The temple owns both antique and modern Jewellery in Gold and Silver worth about Rs.3000/- mostly donated by devotees. They landed properties of the temple comprise about 252.66 acres of both wet and dry lands, which fetch an annual income of about Rs.10000/- by way of rent. This sum is utilized for its upkeep and general maintenance. The annual Hundi collections of the temple amount to Rs.100/- while its income under Archana and Abishega charges in Rs.400 per annum.

Brahmothsavam in chithirai (April-May) Vinayagar Chathurthi, Vijaya Dhasami, Karthigai Deepam, Thiruvadhirai, Sivarathri and Dhanur Pooja in Margazhi are the regular annual festival celebrated here of which the chithirai Brahmothsavam is the most important one. This festival attracts a crowd of not less than 20,000 devotees from far and near.

The affairs of the temple are managed by a Board of Trustees, consisting of three members, all appointed by the Hindu Religious and Charitable Endowments (Administration) Department.



## 18. தகட்டூர் கிழான்

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியிட்ட திருத்துறைப்பூண்டிக் கல்வெட்டுகள் என்ற நூலில் தகட்டூர் கிழான் என்பவரைப் பற்றிக் குறிப்பிடப்படுகிறது. இந்தத் தகட்டூர் கிழான் சேகல் ஊரில் அமைந்துள்ள திருக்கோயிலுக்கு விளக்கெரிப்பதற்கு பொன்தானம் வழங்கியுள்ளதைக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது.

திருத்துறைப்பூண்டித் தாலுக்கா சேகல் ஸ்ரீவர்த்தமானேஸ்வரர் கோயில் கருவறை மேற்புற ஜகதிக் கல்வெட்டு கி.பி.1176 ஆம் ஆண்டில் இரண்டாம் இராஜராஜசோழனின் ஆட்சியில் தகட்டூர்க் கிழவன் ஆதித்தன் என்பவரைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இவர் இவ்வூர் திருவாண்டளந்த நாயனாருக்கு நந்தவிளக்கிற்கு பொன் தானம் செய்து அதில் வந்த வட்டியான நூறு காசுகளைக் கொண்டு குறிப்பிட்ட சிவப்பிராமணர்கள் விளக்கெரிக்க ஒப்புக் கொண்டதைக் குறிப்பிடுகிறது.

இதே கோயிலின் கருவறை வடபுற ஜகதி கல்வெட்டு தகட்டூர் கிழவன் ஆதித்தன் துறையர் வழங்கிய பொன் கொண்டு நந்தாவிளக்கு எரிக்க சிவப்பிராமணர்கள் அனைவரும் கடமைப்பட்டதைக் குறிப்பிடுகிறது.

இந்த தகட்டூர் கிழான் கேரளாந்தகமரத்து தகட்டூர்(கிழவன்) ஆதித்தன் துறையர் என்று குறிப்பிடப்படுகிறார். இந்தக் கல்வெட்டுகள் தமிழ்நாடு தொல்லியல் ஆய்வுத் துறையின் தொடர் எண்.1976/99 மற்றும் 1976/100 ஆகியவற்றைச் சேர்ந்ததாகும்.

## 19. துணைநூல் பட்டியல்


*1. உயிர் வளர்க்கும் திருமந்திரம் - திரு.கரு.ஆறுமுகத்தமிழன் கட்டுரை ஆனந்த ஜோதி தமிழ் தி இந்து பத்திரிக்கை*

*2. கொங்குத் தமிழக வரலாறு - கா.அப்பாத்துரையார்*

*3. சாமதிலிங்கம் பிரதிட்டை விளக்கம் - சரஸ்வதி மஹால் நூல்நிலைய வெளியீடு, தஞ்சை*

*4. சைவ வைணவப் போராட்டங்கள் ஒரு மறுவாசிப்பு சிகரம்.ச.செந்தில்நாதன்*

*5. "சோழர் வரலாறு" - பேராசிரியர்.சி.கோவிந்தராசனார் மற்றும் முனைவர்.சி.கோ.தெய்வநாயகம்*

*6. தமிழ்நாட்டில் பைரவர் வழிபாடு - முனைவர் நாகப்பாநாச்சியப்பன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*

*7. தமிழ்நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு முனைவர் அ.பிச்சை*

*8. தமிழ்நாட்டு வரலாறு சோழப் பெருவேந்தர் காலம் இரண்டாம் தொகுதி, தமிழ் வளர்ச்சித் துறை வெளியீடு*

*9. தமிழக வழிபாட்டு மரபுகள் - மு.அருணாசலம் (தமிழில் பேரா.சிவ.முருகேசன்).*

*10. தமிழர் மானிடவியல் - பக்தவத்சல பாரதி, அடையாளம் வெளியீடு*





*11. திருமறைக்காட்டுத் திருத்தலங்கள் - பெ.சிவசுப்பிரமணியன்*

*12. நடுகற்கள் - சரித்திரச் செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி*

*13. நாகப்பட்டினம் மாவட்டத் தடயங்கள் - தொகுதி II மா.சந்திரமூர்த்தி, முத்து.எத்திராசன்*

*14. நாகைமாவட்டத் தொல்லியல் கையேடு - தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை 8*

*15. பணம் பெருக்கும் பைரவர் - திரு ஸ்டார் ஆனந்த்ராம்*

*16. மகாபைரவர் - ஆகம சிற்பக் களஞ்சியக் கலைமணி திரு.எஸ்.நாராயணசுவாமி,திருவாடுதுறை ஆதின வெளியீடு*

*17. வேதாரண்யம் - முனைவர் இரா.ப.கருணானந்தம்*

18. Census of India 1961 - Temples of Tamilnadu - K.chockalingam IAS

19. Tanjore Gazetteer - F.R.Hemingway